"*Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.*"

"*Seek Truth wherever you can find it,*" *But,* "*Make your choice and stick to it till you reach the End.*"

ஸத்யம்வத.—**Speak the Truth.**

**"Hitch Your Wagon to a Star."**

**"To Thine Own Self be True."**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] ௨ [God is Love : Knowledge is Power: *Om.*

ஸத்யமேஜெயம்—**Satyameva Jayati.**

புத்தகம். 16] 1907-ம் வ௵ அக்டோபர் ௴. [சஞ்சிகை 6

An Appeal to Our Subscribers.—

The Viveka Chintamani Publishing Committee request all subscribers to remit their subscriptions to the Viveka Chintamani without delay and to kindly help them increase their subscription list by new additions to it from among their friends and acquaintances.

நமது சந்தாதாரர்களான நேசர்கள் அவரவர்கள் சந்தாத்தொகையை யனுப்புவதோடு புது சந்தாதாரர்களையும்சேர்த்தனுப்பி யுதவவேண்டுமாய் விவேகசிந்தாமணி கமிட்டியார் அவர்களை விநயமாய்க் கேட்டுக்கொள்கிறார்கள்.

# The Seed & the Sprout-A Practical Lesson in Observation.

## வித்தும் முளையும்-மனநாட்டம் வைக்கும் முறை.

வித்திலிருந்து முளையுண்டாகிறதென்று எல்லாருக்கும் தெரியுமென்றுபேர். ஆனால் உண்மையாய் அதையூகித்து உள்ளபடி அச்சிறு வித்தும் முளையும் போதிக்கும் போதனையை அறிந்தவர் வெகு சிலரேயாம்.

"அடே குழந்தாய், ஸதானந்தம்! இந்த வித்தையை நாம் கற்போம் வா! இதோபார்! இதென்ன? துவரையா?"

"ஆம்!"

இந்தத்துவரையை நன்றாக உற்றுப்பார்! "இதன்மேல் பழுக்கா நிறமான தோல் மூடிக்கொண்டிருக்கிறது."

அதன் மத்தியில் என்ன தோன்றுகிறது?

மத்தியில் சிறு வட்டமான ஒருபுள்ளியும் அதில் கண்ணுக்குத்தெரியாத ஒரு முனையும் இருக்கிறது.

பாட்டி துவரை முளைக்கட்டுவதைப் பார்த்திருக்கிறாயா?

"பார்த்திருக்கிறேன்."

என்ன செய்கிருள்? சொல்பார்ப்போம்!

செம்மண் வாங்கிவந்து அதில் தண்ணீரில் ஊரப்போட்ட துவரையை ஜலம்விட்டுக் கலந்து குவியலாக வைத்திருக்கிருள். ஒரு நாள் வைத்திருந்து பின்னர் அதைப் பார்க்கும்பொழுது முளை கிளம்பியிருந்தால், அந்த அடையாளத்தைக்கொண்டு அதையெல்லாம் வெயிலில் உலர்த்தி விடுகிருள்."

அந்தத்துவரையை அப்படி உலர்த்தாமல் மண்ணிலேயே போட்டிருந்தால் என்னுகும்?

"அது முளைத்து இலைவிட்டுச் செடியாகிப், பின்னர் பூப்பூத்துக் காய்க்கிறதைப் பார்த்திருக்கிறேன். மூன்று வருஷங்களுக்கு முன் ஒரு துவரையை பூச்செடிவைக்கும் தொட்டியில் போட்டுவைக்க அது ஒரு வருஷத்துக்கெல்லாம் பெரிதாகிக் காய்க்க ஆரம்பித்தது. அதை நான் பார்த்திருக்கிறேன்."

நல்லது! இந்தத்துவரைவித்து செய்யும் வித்தையைச்சற்றுக் கவனித்துப் பார்ப்போம்: இந்தத் துவரை உயிருள்ளதா? உயிரில்லாததா?

இப்பொழுது உயிரில்லாததுபோல் காண்கிறது! அதை மண்ணில்போட்டு தண்ணீர் விட்டால் உயிர் பெற்றதுபோல் முளைத்தெழுந்து ஒன்று நூருகக் காய்க்கிறது. ஆகையால் அதை யெப்படிச் சொல்கிறதென்று எனக்குத் தெரியவில்லை.

சரி! நீ பார்த்து நோட்டமிட்டுக் கொண்டவரையில் சரிதான். இந்தத் துவரைக்குள் உயிர் ஒளித்துக் கொண்டிருக்கிறது என்று சொல்லலாமா?

ஆம், அப்பா, ஒளித்துக் கொண்டிருக்கிருற்போலேதான் இருக்கிறது. ஆனல் அதைப் பார்க்கத்தான் முடியவில்லை.

பார்க்க முடியவில்லையா? மண்ணில்போட்டுத் தண்ணீர் விட்டால் முளைக்கிறது என்று சொன்னுயே! அந்த முளையை நீ பார்க்கவில்லையா?

முளையைப் பார்த்திருக்கிறேன்! அதை முளைக்கும்படி செய்கிறதெதுவோ அதைப் பார்க்கவேண்டும். அப்போது தான் எனக்குத் திருப்தியாகும்.

அடே, அதை முளைக்கச் செய்கிறது எதுவோ அதற்கு "சக்தி" யென்று பெயர். "சக்தி"யைக்கண்ணுலே பார்க்கமுடியுமா? அது செய்யுந்தொழிலினுல் தான் அந்தத் தொழிலுக்குப்பின் ஒரு சக்தி யிருக்கிறதென்று ஊகித்துணரலாம்.

"ஊகித்து" என்ருல் என்ன அப்பா? எனக்கு அர்த்தம் ஆகவில்லையே!

"ஊகம்" என்பது மனததினுடைய தொழில். புத்திக்குக் காரண காரியங்களின் தொடர்ச்சியை அறியும் சக்தி யொன்றிருக்கிறது. அது அனுபவமின்றி வராது. அதோ புகை கிளம்புகிறது பார்!

"ஆம்! பார்த்தேன். அங்கே ஏதோ நெருப்புப் பற்றிக்கொண்டாற் போலிருக்கிறது."

உன் கண்ணுக்குத் தெரிந்தது புகை யொன்றுதானே. அதிலிருந்து "ஏதோ நெருப்புப் பற்றிக்கொண்டது" என்பதை யென்னமாயறிந்தாய்? நெருப்புக் கண்ணுக்குத்தெரியவில்லையே!

"ஆம்! நெருப்பு கண்ணுக்குத் தெரியாவிட்டாலும், நெருப்பின்றிப் புகைகிளம்புமா?"

சரி! "நெருப்பின்றிப் புகைகிளம்பாது" என்று உனக்கு என்னமாகத் தெரியும்?

"எனக்குத் தெரியும்! நெருப்பில்லாமல் புகை கிளம்பாது என்று எனக்கு நன்ருகத் தெரியுமே!"

அப்படிதெரிந்தது இதற்குமுன் பார்த்துப் பார்த்து வந்த அனுபவத்தினுல் உன் மனதிற்பதிந்து கிடந்தது; இப்பொழுது அந்த அறிவு உனக்குக் கைக்கு வந்தாற்போல் தெரிகிறது. உன் கண்களைவிட அந்த அறிவு உனக்கு அதிக உதவி செய்யவில்லையா? கண்ணினுல் புகையைமட்டும் பார்த்தாய்! உன் அறிவினுல், கண்ணுக்குத் தெரியாமல் மறைந்திருக்கிற நெருப்பையும் நேரில் பார்த்தது போல் நிச்சயமாகத் தெரிந்து சொல்கிருய்! அல்லவா?

ஆம். நீங்கள் சொல்லவிட்டுத்தான் இது தெரிந்தது. முதலிலேயே என் புத்திக்குப் படவில்லையே!

சிறு குழந்தையின்கண் கண்ணாடியைக் காட்டி அதில் காணும் பிரதிபிம்பத்தைச் சுட்டி "அதோ ஒரு பாப்பா பார்த்தையா!" என்றால் அக்குழந்தை யெப்படி "பாப்பா!" என்று சொல்லி சிரித்து விளையாடுகிறதோ, அப்படிப்போல, மனதுக்குத் தன் சேஷ்டையைத் தானேயறியும் சக்தி முதிர முதிரத் தான் அப்பியாசத்தால் வரும். கண்ணாடியில் காணும் உன்முகம் உனது நிழல் என்று உனக்குத் தெரிகிறதுப்போல, குழந்தைக்கு ஏன் தெரியவில்லை ?

"அது குழந்தை! அதுதான் தெரியவில்லை."

ஆகையால் "குழந்தை"க்கு "அறியாமை" இலக்ஷணமாகிறது பார்த்தையா ?

"குழந்தை" யென்றால் "அறியாமை"யா? குழந்தைக்கு எவ்வளவு சமர்த்திருக்கிறது அப்பா!

சமர்த்திருக்கிறது சரிதான் பிள்ளாய்! "குழந்தைக்கு ஏன் தெரியவில்லை?" "யென்று நான் கேட்டதற்கு "அது குழந்தை" என்று நீ தானே பதில்சொன்னாய்! அங்கே "அது குழந்தை" என்று சொன்னதற்கு அர்த்தம் என்ன ? யோஜித்துப்பார் !

"அங்கே குழந்தையென்று சொன்னது அறியாமை என்ற அர்த்தத்திலே தான்என்று இப்போ மனதிற்படுகிறது!"

ஆகையால் குழந்தைப்பருவத்தின் இலக்ஷணங்களில் ஒன்று "அறியாத் தன்மை" யென்றாகிறது! அல்லவா ?

"ஆம்! ஆனால் 'குழந்தை தெய்வம்' என்கிறார்களே. தெய்வம் அறியாத்தன்மையா ?

நன்றாகக் கேட்டாய்! குழந்தையின் இலக்ஷணங்களில் ஒன்று "அறியாத்தன்மை" யென்று சொன்னேன். இன்னொரு இலக்ஷணம் தெய்வத்தன்மையாக விருந்தால், அப்போது இரண்டும் ஒன்றுதான் என்று எப்படியாகும் ?

"அறியாத்தன்மை" யென்றால் வித்தியாசம் பாராட்டிப் பகுத்தறியும் அறிவு இல்லாமையைக்குறித்துச் சொன்னது.

"தெய்வத்தன்மை" யென்பது "எல்லாம் ஒன்று" என்கிற "அபேதஞானத்துக்கு"ச்சொல்கிறது. இந்த இரண்டுகுணமும் குழந்தையி னிடத்திலிருக்கிறது தான். ஆனால் அதைப்பற்றி யிப்போ நான் பிரஸ்தாபிக்கவில்லையே! "ஊகம்" என்றால், கண்ணால்பார்த்த ஒன்றை அறிவால் முன்னனுபவத்துக்கொத்திருக்க அறிந்து சொல்வது என்றுசொல்வதற்காக இந்தக்கேள்விகள் பிறந்தன. "ஊகம்" என்றால் என்னவென்று தெரிந்துகொள் இப்போ.

"ஊகம் என்றால் மனக்கண்ணால் பார்ப்பது என்று சொல்லலாமா ?"

அதுவேசரி! முகத்துக்குக்கண் எப்படி காணும் கருவியாக இருக்கிறதோ அப்படிப்போல மனதுக்குக் கண்போலுதவும் புத்தியொன்று இருக்கிறது. அதற்குத்தான் "மனக்கண்" என்று சொல்கிறது. துவரைவித்திலிருந்து முளைகிளம்பினதைக்கண்ணால் பார்த்ததுபோல், அந்த முளையைக்கிளம்பச் செய்யும் சக்தி யொன்று வித்திற்குள்ளிருக்கவேண்டுமென்று புத்தியினால் அறிவதுண்டே அதைத்தான் "மனக்கண்ணால் பார்ப்பது" என்று சொல்கிறது.

"சரி! அப்படியானால் வித்துக்குள்ளே முகக்கண்ணுக்குத் தெரியாதபோனாலும் மனக்கண்ணுக்குத்தெரியும் சக்தியொன்று இருக்கிறது என்பது இப்பொழுது தெரிந்தது."

இந்தத் துவரை வித்திலே இப்பொழுது என்ன என்னவிருக்கிறது நீ பார்த்த அளவுக்குச்சொல்பார்ப்போம்!

"முதலாவது வித்து இருக்கிறது. இரண்டாவது முளையிருக்கிறது. மூன்றாவது கண்ணுக்குத்தெரியாத "முளைக்கும் சக்தி" யொன்று இருக்கிறது. அது வித்துக்குள் தானிருக்கிறது என்று எப்படிச்சொல்கிறது?

அந்த முளை யெங்கேயிருந்து கிளம்புகிறது பார்த்தாயா ?

"வித்துக்குள்ளிருந்துதான் அது கிளப்புகிறது. ஆனால் மண், தண்ணீர், வெயில், காற்று இதெல்லாம் கூடச்சேர்கிறதே !"

உண்மைதான்! இவையெல்லாம் சேர்ந்தாலும், வித்துக்குள்ளேயிருந்து தானே முளை வருகிறது. உள்ளேயிருக்கும் சக்தியைக் கிளப்பிவிடுகிறதொழில் இவைகளுக்குண்டானாலும், முளைக்கச்செய்யும் சக்தி வித்துக்குள் தனியாக வொன்றிருக்கிறதென்று தான் சொல்லவேண்டும். எப்படியென்றால் தூங்குகிறவனை யெழுப்புகிறவன் அவனுக்கு வெளி

யிலிருந்தாலும் அவனை விழிக்கச்செய்யும் சக்தி அவனுக்குள் தானேயிருக்கவேண்டும்? உயிரில்லாதவனை யெழுப்பினல் எழுந்திருப்பானு?

சரி! இந்தத்துவரைவிதையில் வித்து,முளை, சக்தி" யென்று மூன்று இருக்கிறது!

இந்தமூன்றும் சேர்ந்தததுதான்! உயிர் தெரிந்ததா?

"அது எப்படி?"

"பண்டு முளைப்பது அரிசியே யானாலும் விண்டுமிபோனல் முளையாதாம்", என்று வாசித்திருக்கிருயோ இல்லையோ?

"அதற்கென்ன?"

நெல்லை விதைத்தால், அதிலிருந்து முளைக்கிறது அரிசியேயன்றி உமியல்ல. ஆனல் உமியில்லாத அரிசியை விதைத்தால் முளைக்குமா?

"முளைக்காது."

அரிசி முளைத்தாலும், அதற்கு உமியெப்படி ஆதாரமாயிருக்கிறதோ, அப்படிப்போலஉயிர் என்பது உடம்பல்லாவிட்டாலும், உடம்பை ஆதாரமாகக்கொண்டு உயிர் விர்த்தியாகிறது. இப்பொழுது துவரை வித்தை உதாரணமாக வெடுத்துக்கொள்வோம். அதன் மேல்தோலிதான் நம்மது உடப்புக்கு சமானம். அதற்குள்ளிருக்கிற இரட்டைப்பருப்பு "துவிதமாயுள்ள" "தொந்த பந்தத்துக்குள்பட்ட" நம் மனதாம். துவிதம் என்றால் இரட்டையென்று அருத்தம். "தொந்தபந்தம்." என்றால், உஷ்ணம்-சீதளம், நலம்-தீது, ஆண்-பெண், மேல்-கீழ் என்று இரட்டையாய்ப் பிரிந்திருக்கும் உலக விஷயங்களை "நான் நீ-" யென்று வித்தியாசம் பராட்டி, "நான், எனது" என்றுபற்றுவதால் வரும் ஒருவித மனக்கட்டு. இரட்டையாயுள்ள பருப்பானது தோலினல் மூடப்பட்டபோது எப்படி ஒரேதுவரையாக விருந்ததோ, அப்படிப்போல, இரட்டையாகவுள்ள நம்மனமானது தேகமெடுத்ததும் ஒன்றாகத்தோன்றுகிறது. உண்மையாகவே நாம் துவரையினுள் பருப்புப்போல், இரட்டையாகச்சேர்ந்திருக்கிறோம். தாய், தகப்பன் என்கிற இருவர் அம்சமும் சேர்ந்தே இந்த தேகமுண்டாயிற்று. அதேபோல், ஈசுவரன், மாயை யென்கிற இரு அம்சமும் சேர்ந்தே நமது மனமும் உண்டாயிற்று. துவரைக்குள் சக்தி போல் நமக்குள்ளும் ஈசுவரசக்தி யொன்று தூங்கிக்கொண்டிருக்கிறது. அந்த சக்தி தான் மிகவும் முக்கியமானது. நமது உயிர்நிலை நிற்பதற்கு ஆதாரமாயுள்ளது இந்த சக்தியே. இது சுருண்டு முடங்கித் தூங்கிக்கொண்டிருப்பதால், இதை யோகிகள் ஸம்ஸ்கிருதத்தில் குண்டலினீ யென்று சொல்வார்கள். ஆனல் துவரை வித்துக்குள் சக்தி போலவே, இந்த சக்தியும் நமக்குள் இருக்கிறதென்பதற்குச் சந்தேகமில்லை. துவரை வித்தனின்று எப்படி துவரை முளைத்துச்செடியாகி பழுத்துக் காய்க்கிறதோ, அப்படியே, மனம் என்னும் வித்திலிருந்து அறிவு என்னும் சக்தியினல் அன்பு என்னும் முளை முளைக்கிறது. இந்த அன்பு என்னும் முளை கிளைத்துச் செழித்துச் செடியாகி மரமாகிப் பூத்துப் பிஞ்சுவிட்டுக் காய்த்துப் பழமானல், அதுவே அன்பு முதிர்ந்து ஆனந்த ரஸம்பொழியும் தேய்வமாம். அவரே தான் கடவுள் என்று நீ உனது வாசகப்புஸ்தகத்தில் படித்தது. அந்த அன்பு எல்லாம்கடந்ததானபடியால், "எல்லாம் கடந்து உள்ள" அதற்குக் கடவுள் என்கிற பேர் வழலாயிற்று. ஆகையால் "கடவுளைவழிபடு" என்ற மூதுரைகளு அருத்தம் மனதில் அழுக்குப்படியாமல், அறிவை விர்த்திசெயது, அதனல் அன்பு பெருகி, உன் தாய் தநதை, அக்காள், தங்கை, அண்ணன், தம்பி, இவர்களை நீ யெப்படி அன்போடு பாராட்டுகிருயோ, அப்படியே எல்லா மனிதர்களையும் சகோதர பாவத்தோடு நேசித்துக் கடவுளைத் தாயும் தந்தையும் குருவுமாகவும், மற்றப்படி நீ ஆசைப்பட்டு விரும்பும் எல்லாவற்றிலும் வித்தில் முளையும், முளையில் சக்தியும் போல, உன் ஆசைரூபமான மனதில், நேசம் என்று சொல்லும் அன்பு ரூபமான முளையும், அன்பு ரூபமான முளையில், அறிவு ரூபமான சக்தியும் இருக்கப்பார்க்கவேண்டும். வித்தில்லாமல் எப்படி முளையில்லையோ, அப்படிப்போல, ஆசைக்குக்காரணமான மனசில்லாவிட்டால், அன்பு, நேசம் என்பதற்கு இடமேயில்லை. வித்தும் முளையுமிருந்தாலும் முளைக்கிறசக்தியில்லாவிட்டால் அந்த வித்து எப்படிப் பயன்படாமற் போகுமோ, அப்படிபோல, அறிவு என்னும் சக்தியில்லாவிட்டால், ஆசைதரும் மனசும், அம்மனசுக்குள் அன்

பும் இருந்தும் பயன்படாமற்போகும். ஆகையால் ஐந்து வயதிலேயே வித்தியாப்பியாசம் தொடங்கி, பள்ளிக்கனுப்பி வித்தை கற்பிப்பதெல்லாம் அறிவுவிர்த்திக்காகவே. அறிவு என்னும் சக்தி விர்த்தியானால், அன்பு என்னும் முளை முளைத்து, அதனால், பழைய மனது துவரம் வித்தைப்போல், வேறுபட்டு நழுவி, மேலே கிளையும் கீழே வேருமாக மாறிப்போனாலும், பின்னால் ஒன்றுக்கு நூறாக ப்பலனைக்கொடுப்பதைப்போல்; நான் தேகம் என்கிற சின்னமனது நசித்துப்போய், இந்த ஜகமெல்லாம் நானே யென்கிற பெரியமனதுண்டாகி ஒன்று கோடியாகப்பலனைக் கொடுக்கும். இந்தப் பெரியமனதுக்கு மஹத் என்று பேர்.

"நான்தேஹம்" என்றேயிருப்பவன் எப்படியும் அழிந்துபோவான். ஏனென்றால் தேஹம் அழியும் சுபாவமுள்ளது.

அதைவிட்டு "இக்குடும்பமெல்லாம் நான்" என்றிருக்கும் ஸம்ஸாரி சுகதுக்கத்தில் ஈடுபட்டு வருந்தினாலும் புத்திரபௌத்திராதி பரம்பரையினால் அவன் குலமழியாது அவன் பேர் நீடித்திருக்கும்.

இவனிலும் மேலானவன் "என் ஸ்வதேசமே நான்" என்றிருப்பவன் இவன்தான் தேசாபிமானி.

முதற் சொன்னவன் தேஹாபிமானி இரண்டாவதவன் 'குடும்பாபிமானி' அல்லது குடும்பி. மூன்றாவதவன்தான் மேற் சொன்னபடி தேசாபிமானி, இவனுக்கு மேலொருவனுண்டு. அவன் 'எல்லாதேசமும் நான்' என்றிருப்பவன். அவன் உலகாபிமானியாவன். இவனுக்கும்மேலே "சந்திர சூரிய நக்ஷத்திராதிகளெல்லாம் நான்" — "தோற்றுவதாயுள்ள சராசரப்பொருள்களாயுள்ள ஜகமே நான்" என்றிருப்பவன் யோகி. அவனுக்கு எல்லாம் சரீரம். சூரியனும் அவன் சரீரமே-சந்திரனும் அவன் சரீரமே. தேவதைகளும் அவனே. கிருமி கீடங்களும் அவனே. உயிர்நிலையை உள்ளபடியறிந்து த்ரிவிதமான அந்த உயிரே தானாக நிற்பவன் யாரோ அவன் யோகி. ஏனென்றால்உயிர் எப்படியெல்லாவற்றிலும் ஒன்றுபட்டு நிற்கிறதோ அப்படிப்போல எல்லாவற்றிலும் அவற்றின் உயிர் நிலையாக ஒன்றுபட்டு நிற்கும் சத்தியவனுக்குண்டு. யுக் = சேர்ந்திருத்தல்; எல்லாவற்றோடும் சேர்ந்திருக்கும் ஏகீபாவத் தன்மை யவனுக்குண்டாதலால் அவனுக்கு "யோகி"—என்கிறபேர் பொருத்தமானது தானே! இவன் சக்தி யோடு ஒன்றுபட்டு சக்திமயமேபானபோது வித்தில் சக்தி முதலில் மறைந்திருந்து பிறகு முளையில் தோன்றி மரமாகி, ஒன்றுக்குப்பத்துநூறு கோடிபாகப்பலனைக் கொடுத்து, மரம்பட்டுப்போகும்பொழுது அதன் சக்தியெல்லாம் எப்படி மறுபடியும் அது கொடுத்த பலனின் வித்திலேயே ஒடுங்கி வருகிறதோ, அப்படிப்போல, யோகி சக்திமயமேயாகி, உலகுக்கு வேண்டிய உபகாரங்களெல்லாம் செய்தலுத்தபின், சக்திக்கிருப்பிடமாகிய அன்பில் ஒடுங்கிவிடுவான். இவனே சுத்தமுக்தன். இவனுக்கும் தெய்வத்துக்கும் வித்யாசமில்லை. சமுத்திரத்தில் சேர்ந்த நதிபோல, இவன் கடவுளோடு சேர்ந்து கடவுளிடத்தில் ஐக்கியமாய்விடுகிறான். இப்படிப்பட்ட நிலைவரும்பொழுது, தானே தெய்வம் ஆய்விடுகிறபடியால் தெய்வமும் தெய்வம்தொழுதலும் அவனுக்கில்லை. யோகியானவன் "எல்லாம் நீ" யென்று கடவுளைத்தொழுது தன் அகங்காரவிர்த்தியினால் தனக்கு பந்தமுண்டாகாதபடி காப்பாற்றிக்கொள்வான்.

ஸ்ரீ அப்பர் ஸ்வாமிகள் ஸ்வாமியைத்தொழுதேத்திய துதியை இப்போது சொல்லு பார்ப்போம்:—

"அப்பநீ அம்மநீ அய்யநீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய தாரமும் உண் பொருளும் நீ
ஓர்குலமும் சுற்றமும் ஒருருநீ
துணையாயென்னெஞ்சந் துறப்பிப்பாய் நீ
இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்துநீ இறைவநீ
ஏறூர்ந்த செல்வ நீயே!"

"வந்தேமாதரம்!" என்று சொல்கிற மந்திரத்தின் அர்த்தமும் இதுவேயாதலால், அதை பயபக்தியோடும், அன்பாதரவோடும், தாயைக் கண்டுவணங்கும் பிள்ளைபோல், மனஅமைதியோடு திரிகரண சுத்தியாய்ச் சொல்லல் வேண்டும். அப்படிச்சொன்னால் எல்லாருக்கும் தாயாகியதேவி தன்னைச்சரணடைந்த குழந்தையைக் கையிலெடுத்து உச்சிமுகர்ந்து உடம்பெல்லாம் தடவிக்கொடுத்து எல்லா சம்பத்தும் கொடுத்துக் காப்பாற்றுவாள். இது நிச்சயம், நிச்சயம்.

இனி தேவியைத்தொழும் பாட்டொன்று சொல்வையே அதைச்சொல் பார்ப்போம்.

"தசமியிலே சாகரத்துக் கப்பாலேறி" என்கிற பாட்டா ?

ஆம்; ஆம்! அதுதான் !

"தசமியிலே சாகரத்துக்கப்பாலேறிச்
சிலம்பொலியுமுனதுடைய இருக்கால்கண்டு
நிசமாக ஸ்தூலசூக்ஷ்மத்தில் தோன்றி
நிஷ்களத்தில் நீயுநானு மொன்றேயாகி
அறிவில்லா ஆனந்த மயமேயாகி
அருள்வெளியாய் வரமருள்வாய் அகண்டரூபி!
சுசிவழியாய்ச் சுசிமுகமாய்ப் பிள்ளைமுகம் பார்த்
[தாள்வாய்
சோதியே மனோன்மணியே ஸாதினவாழ்வே!"

குழந்தாய், வித்திலிருந்து முளைகிளம்பும்படி செய்கிறசக்தியைப் பார்க்கவேண்டுமென்றாயே! ஸ்ரீ அப்பர் ஸ்வாமிகள் தான் நேரில்பார்த்தபடி சொல்லிப் பாடியிருக்கிறார் பார்த்தாயா? அறிவேசக்தி; அந்த அறிவே தேவியும். ஆகையால் மனோசக்தியோடு அறிவு விர்த்தியாகும்படி எதையும் உற்றுப்பார்த்து ஊன்றியாலோசித்துணர்ந்து வந்தையானால், ஸ்ரீ அப்பர்ஸ்வாமிகள் கண்கூடாக்கண்ட தேவிதரிசனம் உனக்கும் கிடைக்கும் ஆகையால் அறிவை விர்த்தி செய்வதோடு மனதில் மாசு-மறு படியாதபடி ஜாக்ரதையாய்ப் பார்த்துவா. கெட்ட சகவாசம் எப்பவும்கூடாது. துஷ்டர் சகவாசம் துஷ்டத்தனத்தை விர்த்திசெய்யும்.

ஆகையால் இப்பொழுதைப்போல் உன் தாயையே தெய்வமாகப்பாராட்டி அவள் வித்து முதல் எல்லாவற்றிலும் சக்திரூபமாக ஒளிந்துநின்று உன்னைப்பார்த்து வருகிறாள் என்று நினைத்து எல்லாவற்றையும் நேசத்தோடு பாராட்டி வந்தாயானால், ஒரு துவரையிலிருந்து தேவிவரையில் இப்பொழுதுநம் மனம் ஓடினதுபோல் ஒவ்வொன்றும் தேவியின் மகிமையைவிளக்கும். அறிவே தேவி, அந்த அறிவே நமமெல்லாருக்கும் தாய். உபாத்தியாயர் அந்த அறிவைக்கொடுப்பதால் அவரும் தாய்க்கு சமானமாம். அவரிடத்தில் தாயன்பு பாராட்டுவதற்குத் தான் குருபக்தி யென்று பெயர்.

நீ துவரைமுளைப்பதைப் பார்த்ததுபோல், நான் அன்பு முளப்பதை 'மனக்கண்ணால்' பார்த்தேன். அதை ஆனந்தத்தாய்மொழியில் நீ படித்திருக்கிறாயா?

அதை நான் படிக்கவில்லை. ஆனால் இப்பொழுது பார்க்கவேண்டும்போல் தோன்றுகிறது, அப்பா!

மேலேபோய் ஆனந்தத்தாய்மொழி ஒரு காபி எடுத்து வா! காட்டுகிறேன்."

இதோ பார்த்தையா! இதை வாசித்துப் பார்!

குழந்தை வாசிக்கிறான்.—

அன்பு முளைத்தல்.

உட்கார்ந்த வேளையிலே உடல்மறைந்தநித்திரையிலே
ஆனந்தத்தோட்டமதில் ஒரு அருமுளையைக்
[கண்டு விட்டேன்;
கண்டுவிட்ட முளையதுவைக் கண்கொட்டாதுற்று
[நோக்கி
களைப்பிளைப்பு நீங்கிக் கனவு நனவும் நீங்கி,
ஆறியமர்ந்து அறிவாலே பார்த்திருந்தேன்
கோணல் முளையதுவும் கொம்புபோல் நீண்டது
[காண்
நீண்டபின்னர்க் கிளைவிட்டுப் பிரிந்தது காண்
பிரிந்த கிளைகளவை யிலைவிட்டுத் தழைத்தனவே
தழைகளதிகரிக்கத் தளிர்கள் மிகக்கிளம்பினவே.
தளிர்கள் மிகத்துளிர்க்கக் கப்புக்கிளைகள் கண்டேன்
இத்தனையும் செழித்தோங்க ஏகாந்தமாய் வளர்ந்த
[துவே!
சின்னச்செடியாச்சு சிறப்பான மரமாச்சு;
காயில்லையென்று சொல்லிக் கைபிசைந்து நானழு
[தேன்.

ஆறுதல் கூறல்.

பூக்கும் பருவமென்றாள் பிஞ்சுவிடும் காலமென்
[றாள்
அல்லும் பகலும் அன்பான நீர் வார்த்து
ஆதரவு செய்து அருமையாய் வளர்த்து வந்தால்
இன்பக்கனியீன்ற மிது நிச்சயம் நிச்சயமென்றாள்.
அம்மாளுரைத்ததுவை அன்பாலே நம்பினேன்
[நான்.

இந்த அன்பால் நம்பும் நம்பிக்கையைத் தான் உண்மையான குருபக்தி யென்று சொல்லுகிறது! இந்தபக்தி யிருந்தால் ஆகாததொன்றில்லை. இந்த பக்தி இல்லாமல் தான் நம்தேசம் சீர்குலைந்து போயிற்று, உன்னைப் போலொத்த சிறுவர்கள் காலச்சேர்க்கையால் கெட்டுப்போகாமலிருக்க இந்த உண்மையை உனக்குரைத்தேன். இதை நீ நன்றாகக்கவனித்து மனதில் வைத்துக்கொள்ளவேண்டும்

"சரி. அப்படியே செய்கிறேன். இந்த உண்மையை இவ்வளவு நன்றாக வெடுத்துணர்த்தியதற்காக நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன்."

## ONIONS AS A REMEDY.
## வெங்காயத்தின் விசேஷ குணம்.

——:(*):——

இந்தியாவில் நாட்டுவைத்தியம் வீட்டுவைத்தியம் என இரண்டு பேர் வழங்குகிறது. நாட்டுவைத்தியம் என்றால் இந்த நாட்டுக்குரிய வைத்தியம். தேசத்தின் குணவிசேஷங்களுக்குப் பொருந்தியதாக வியாதியும் அதற்குத் தக்கபடி பரிகாரமும் ஏற்பட்டிருக்கிறது. வீட்டுவைத்தியம் என்பது வீட்டிலுள்ள சுகசௌக்கிய சௌகரியாசௌகரிய விசேஷங்களுக்குத் தக்கபடி யுண்டாகும் வியாதிகளும் அதற்குத் தக்கபரிகாரங்களும் உண்டு என்பதைக் குறிப்பிக்கிறது. உதாரணமாக இப்பொழுது நடந்துவரும் ஸெஷன்ஸ் விசாரணையில், ஒரு பெண்பிள்ளை தனது சிசுவைத் தெருவில் விட்டு விட்டுப்போய்விட்டாளென்று குற்றச்சாட்டு ஏற்பட்டு அது விசாரணைக்கு வந்ததில், அவள் விட்டு விட்டுப்போன குழந்தையைப் போலீஸார் எடுத்து அனாதைக் குழந்தைகள் ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனதாகவும், அங்கே அதற்கு சுகசௌக்கியமான ஆகார போஷணாதி சௌகரியங்கள் உபசரணையாய் நடத்தி அக்குழந்தையைப்பார்த்து வந்ததில் அது சுக சௌக்கிய உபசரணைக்கு வழக்கப்பட்டதில்லையால், சுகபோஷணை யதன் தேகத்திற்கு ஒத்துக்கொள்ளாமல் ஒருவாரத்தில் வயிற்றுப்போக்கினால் அது இறந்துவிட்டது என்று பப்ளிக் ப்ராஸிகியூடர் சொன்னார். இங்கே வீட்டுவைத்திய முறைதப்பி, ஆஸ்பத்திரி வைத்தியத்தை யனுஷ்டித்ததால் அக்குழந்தைக்கு அது ஒத்துக்கொள்ளவில்லை. பட்டினிகிடந்து வழக்கப்பட்டவனுக்கு வயிறு நிறையக் குறைவின்றிச் சோறகப்பட்டால் அவன் சிலநாளில் வியாதிகண்டு இறந்து போய்விடுகிறான். இது பஞ்சத்தின் அனுபவம். அப்படியே கஷ்டஜீவனம் செய்தவனுக்கு சுகஜீவனம் ஒத்துக்கொள்கிறதில்லை. சுகஜீவனம் செய்தவனுக்கு கஷ்ட ஜீவனம் ஒத்துக்கொள்கிறதில்லை யென்பது தெரிந்துள்ளதுபோல அதற்கு எதிர்மறையானதும் உண்மையே யென்று அனேகருக்குத் தெரியாது.

ஆகையால் வியாதியும் பரிகாரமும் பிரத்தியேகமாக இன்னதென்று வரையறுத்துச் சொல்ல முடியாததாயிருக்கிறது. உதாரணமாக மந்தகாசம் என்பது முதலில் மார்ச்சளிபோல் தோன்றி சுவாஸப்பைகளின் பலங் குறையக்குறைய மந்தகாசமாகி, அதுவும் முற்றிக்ஷயரோகத்தில் வந்து முடிகிறது யாருக்கும் தெரிந்த விஷயம். இந்த வியாதி சிகிச்சைக்குக் கட்டுப்படுகிறதில்லை யென்று வைத்தியர்கள் முறையிடுகிறார்கள். ஆனால் டாக்டர் ஜோன்ஸ் என்னும் அமரிக்கா டாக்டர் ஒருவர், வெங்காயத்தினால் இவ்வியாதி யணுகாமல் தேகத்தைக் காப்பாற்றிக்கொள்ளலாமென்று அனுபவரீதியாகக்கண்டு எழுதியிருக்கிறார். எல்லாம் தேகபலத்தைப் பொறுத்தது. தேகபலம் குறையாமலிருக்கும் பொழுது சாமான்யசிகிச்சையாலும் சொஸ்தமாகும் வியாதி தேகபலம் குறைந்தபொழுது இராஜ வைத்தியத்தினாலும் குணப்படுவதில்லை. டாக்டர் ஜோன்ஸ் சொல்கிறார்:— "மார்ச்சளி கொண்டு சுவாஸம் விடுகிறது கஷ்டமாகத்தோன்றிற்றோ, உடனே வெங்காயத்தை சிதள் சிதளாகச் சீவி மெல்லிய துணியில் வைத்து மார்முழுதும் மூடும்படியானதாகப்பரத்தி, சுட்ட கல்லில் அதை வைத்து ஆவி புறப்படச் சூடேறினதும், மாரில் வைத்துக் கட்டிக்கொண்டு சூடு ஆறினதும், அதை யெடுத்துவிட்டு மாறு ஒத்தடம் போட்டால், மார்வலியும் சுவாஸ கஷ்டமும் தீர்ந்து போம் என்று சொல்கிறார். குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும்கூட ஆரம்பத்தில் இதை யுபயோகித்தால் மார்க்கட்டு, மார்ச்சளி முதலிய ரோகங்கள் பறந்து விடுமென்று சொல்கிறார்.

வெங்காயத்துக்கு உணர்ச்சியதிகம். கெட்டகாற்று விஷக்காற்று முதலிய வியாதிவித்துநிறைந்த துர்க்கந்த வாயுக்களைக் கிரகித்துக்கொள்ளும் ஆகர்ஷண சக்தி அதற்கு மிகவும்முண்டு. வாந்திபேதிகாலத்தில் வீட்டுக்கு வீடு வாந்திபேதி காண, ஒரு வீட்டில் மட்டும் அந்த வியாதி காணவில்லை. இந்த வீட்டில் என்ன விசேஷமென்று பார்த்தபொழுது, அங்கே வெங்காயம் வலையில்கட்டி மாட்டியிருக்கக் கண்டார்கள். அதைப்பார்த்ததில், அதுவெல்லாம், அழுகியிருந்தது. விஷவாயுவையெல்லாம் அது கிரகித்துக்கொண்டுவிட்டது. ஆகையால், அழுகின வெங்காயத்தை உபயோகிக்கவே கூடாது. அதில் என்ன வியாதிவித்துகள் சேர்ந்திருக்குமோ, வெகு ஜாக்கிரதையாக விருக்கவேண்டும். இதெல்லாவற்றிலும் மனோதைரியம் எல்

லாவியாதிக்கும் கைகண்ட ஔஷதம். மனுஷன் உண்மையாக மானஸரூபியே யன்றி தேஹரூபி யல்ல. ஆகையால் மனசு அழுக்குப்படாமலிருந்தால், தேகத்தை வியாதி பீடிக்காது. சந்தர்ப்ப விசேஷங்களால் நேர்ந்த தேகவியாதிகளும் அவனை மிகவும் பீடிக்காது சீக்கிரத்தில் தீர்ந்துவிடும்.

## LADIES' COLUMN,—மாதர் பக்கம்.

### சென்னை ஹிந்து மாதர் சங்கம்.

## சுதேசாபிமானம்.

(ஸ்ரீமதி அம்மணி அம்மாள் படித்த வியாஸம்.)

பிரியசகோதரிகளே,

மனுஷ்யாளுக்கு இருக்கவேண்டிய குணங்களில் சுதேச அபிமானம் என்பது முக்யமானது. ஸ்வதேச அபிமானமில்லாதவொரு மனுஷனாவது ஸ்திரீயாவது எந்தப்பாகத்திலும் இருக்கமாட்டார்கள். உதாரணமாய் நாம் வேலைநிமித்தமாகவோ வேறு காரணத்தினாலோ வேறு தேசங்களுக்கோ அல்லது ஊர்களுக்கோ போகநேரிட்டாலும் நம்முடைய சொந்த ஊர் (அதாவது நெடுநாளாய் வஸித்து வந்த ஊர்) போய்ச்சேரவேணுமென்று ஆசை உண்டாகிறது. அதேமாதிரியாக நம்முடையது என்கிற ஒவ்வொரு வஸ்துவின் பேரிலும் நமக்கு அபிமானமுண்டாகிறது. எல்லாவற்றையும் சமமாய்ப்பாவிக்கும் தத்வஞானிகளாய் நாம் இருந்தால் தவிர மனுஷ்யாளுக்கு நம்முடையவஸ்து என்கிறதில் இருக்கிற அபிமானம் போகாது. அவரவர்கள் இருக்கிற ஊர் சிறு கிராமமாயிருந்தபோதிலும் கூட அவர்கள் அதையே சிலாகித்துப்பேசுவது அவர்களின் அபிமானத்தினாலேதான். பட்டணங்களிலிருப்பவர்கள், எவ்வளவு புழுதியும் சாக்கடைநாற்றமுமுள்ளதாயிருந்தாலும், பட்டணவாஸத்திற்கு சமானம் கிடையாது என்றுதான் சொல்லுவார்கள், நம்முடைய குழந்தைகள் அழகில்லாமலிருந்தாலும் நமக்கு அபிமானம் போகிறதா! இதனால் நமக்குத்தெரிகிறதென்னவெனில் நம்முடையது என்கிற விஷயம் வந்தமாத்திரத்தில் எது எப்படி இருந்தபோதிலும் நமக்கு அபிமானம் உண்டாகிறது. அப்படியிருக்க நம்முடைய தேசம் என்கிற விஷயத்தைப் பற்றி நமக்கு அபிமானமிருக்கிறதில் என்ன விசேஷமிருக்கிறது. இருக்கவேண்டியதுதானே. தேசாபிமானம் என்கிற விஷயத்தில் நம்தேசந்தான் இப்போ கீழ்ஸ்திதியிலிருக்கிறது.

ஏனென்றால் இவர்களுக்கு தேசாபிமானம் என்பது இருந்தபோதிலும் அதைக்காட்டக்கூடிய செய்கைகளை செய்கிறதில்லை. தேசாபிமானத்தைக் காட்டக்கூடிய செய்கைகள் என்றால் என்னவென்று பலமான சந்தேகம் பிறக்கலாம். அவைகளைச்சற்று விஸ்தாரமாய்க்கூறலாம். நம்முடையதேசத்தில் ஏழைகள் அதிகமாயிருக்கிறார்கள். பஞ்சம் அதிகமாய் பீடிக்கிறது. இவைகளுக்கெல்லாம் காரணம் என்ன? இவ்விஷயத்தைப்பற்றி சற்றுஆழ்ந்து யோசித்தால் இவற்றிற்கெல்லாம் காரணம் சீமைச்சரக்குகள் வந்து குவிந்து அதனால் கைத்தொழில் நசித்துப்போனதே என்று தெரியவரும். இன்னும் ஒரு காரணம்: நம் தேச ஆகார விளைபொருள்களின் ஏற்றுமதி. முதலில் கைத்தொழில் விருத்தியைப்பற்றிதான் நாம் கவனிக்கவேண்டியது. ஸ்திரீகளாகியநாம் இவ்விஷயத்தில்செய்யவேண்டியதென்ன என்பதை ஒவ்வொருவரும் தனக்குத்தானே தீர்மானம்செய்துக்கொள்ளவேணும். நாம் அந்நியதேசவஸ்துவை விலக்கவேணும். அந்நியதேச வஸ்துவைவிலக்குவதில் ராஜத்துரோகமான செய்கை ஒன்றுமில்லை. நாம் தாராளமாய் செய்யலாம். கூடியவரையில் சுதேசவஸ்துவை வாங்கி நாம் ஆதரிப்போமானால் மேன்மேலும் கைத்தொழில் விருத்திமுகங் காட்டி ஏழைகள் ஜீவிக்கஇடமுண்டு. பரதேசசாமான்கள் பார்வைக்கு பளபளப்பாயும் சீக்கிரத்தில் நாசத்தை அடையக்கூடியதாயும் விலை ஸரஸமாகவும் அகப்படுகிறது. இந்தக்காரணத்தை உத்தேசித்து நாம் அவைகளையேவாங்கினால் நம்தேசக் கைத்தொழிலாளிகள் முன்னுக்குவருவதெப்படி? இதரதேசத்தவர்கள் யந்திர உதவியால் வேலைசெய்து பெருமுதல் வைத்து வேலையை நடத்துவதனால் சொல்பவிலைக்கு விற்கிறார்கள். தற்காலத்தில் கொஞ்சம் விலை அதிகமாயிருந்தபோதிலும் நன்றாய கைத்தொழில் முன்னுக்குவருமளவும் எப்படி ஒருவன் தன் பிள்ளையை பிற்காலத்தில் தனக்கு உதவிசெய்வான் என்று நினைத்து எவ்வளவு செலவு செய்தும் படிக்கவைக்கிறானோ, அதுமாதிரியாக நாம் எல்லாரும் ஒத்தாசை செய்யவேணும். இச்சிறு பிரசங்கத்தை தயவுடன் கேட்ட சகோதரிகளுக்கு நன்றி உள்ளவளாயிருக்கிறேன்.

# AGRA.
## ஆக்ரா

இந்து தேசத்தில் பூர்வீகமானதும் அலங்காரமானதும் தேச சரித்திரத்தில் முக்கியமாய்க்கூறப்பட்டதுமான பட்டணங்களில் இந்த ஆக்ராவும் முக்கியமான பட்டணமாதலால் இதைப்பற்றி யாம் கேள்விப்பட்டதில் மட்டும் திருப்தியடையாமல் நேரில் சென்று பார்த்து, ஆநந்தமடைந்து, அப்பட்டணத்தின் சிறப்பை எழுதி முடியுமோ வென்ற ஆசங்கையினல் ஒவ்வொன்றையும் சவிஸ்தாரமாய் எழுதிக்கொள்ளவில்லாமல் எமது புஸ்தகத்தில் சுருக்கமாய்க் குறித்துக்கொண்டவைகளை நமது சிந்தாமணியைப் படிப்பவர்களும் படித்து சந்தோஷமடையுமாறு வரையலானேம்.

இப்பட்டணத்திற்குச் செல்லவேண்டுமானல் சென்னை இருப்புப்பாதையில் பெரிய சந்திப்பு ஸ்டேஷனுகிய அரக்கோணத்திலிருந்து ரேச்சூர் வரையில் சென்று ஜி. ஐ. பி. இருப்புப்பாதை மார்க்கமாய் வாடி, டோண்டு, மன்மாட், புஷாவல், இடார்சி, ஜான்சி முதலிய சந்திப்பு ஸ்டேஷன்களின் வழியாய் நேர்வடக்காகச் சென்றல் ஒருவாரத்தில் போய்ச்சேரலாம். நாம், காசி, பிரயாகை, அயோத்தி, லக்னே, கான்பூர், டில்லி முதலிய இடங்களைப் பார்த்துக்கொண்டு மட்ரா (மதுரா) மார்க்கமாய் இந்த நகரத்தை யடைந்தோம். இவ்விடத்தில் ஆக்ராகோட்டை, ஆக்ரா ஜங்ஷன் என்பதாக இரண்டு ஸ்டேஷன்களிருக்கின்றன. ஒவ்வொரு ஸ்டேஷனும், வேண்டிய விஸ்தாரமும் அழகும் பொருந்திய கட்டடங்கள். ஆக்ராபோர்ட் என்கிற கோட்டை, ஸ்டேஷன் பட்டணத்தின் மத்தியில் ஜிம்மா மசூதி என்ற கோரியின் கட்டடத்திற்கு சமீபத்திலிருக்கிறது. இந்த ஸ்டேஷனுக்கு அடுத்த தெருவே பெரிய கடைத்தெருவு. பிரயாணிகளின் சௌகரியத்தின் பொருட்டு ஸ்டேஷனுக்கு வெளிப்புறத்தில் ஒரு பத்தியமானவிடத்தில் எப்பொழுதும் டிக்கட்டுகள் விற்கப்படுகிறது. டிக்கட்டுப் பெற்றவர்கள் 24-மணி நேரத்திற்குள்ளாக வண்டியில் ஏறிப்போகலாம். தினத்திற்கு இவ்விடத்திலிருந்து புறப்படுகிறஒவ்வொரு பாதையிலும் ஐந்து அல்லது ஆறுவண்டிகள் போய்க்கொண்டேயிருக்கிறபடியால் பிரயாணிகள் தங்கள் சௌகரியம்போல் டிக்கட்டுகள் பெற்றுக்கொண்டு இஷ்டமான வண்டிகளில் புறப்படுகிறர்கள்.

இந்த ஆக்ரா பட்டணமானது லெப்டினெண்டு - கவர்னருடைய ஆளுகைக்குட்பட்ட வடமேற்கு மாகாணத்தில் ஒரு டிஸ்திரிக்ட்டின் பிரதானபட்டணம்.

இந்த டிஸ்திரிக்ட்டுக்கு வடக்கே மட்ரா ஜில்லாவும், கிழக்கே மனியூர் என்ற ஜில்லாவும், தெற்கே டோல்பூர்என்ற இராஜ்ஜியமும், மேற்கே பரதப்பூர் (Bhurtpur) என்ற இராஜ்யமும் எல்லைகளாய் அமைந்திருக்கின்றன. இந்தப் பட்டணத்தை யடுத்து யமுனைநதியானது சுமார் அரைமைலில் அகலத்தில் ஓடிக்கொண்டிருந்தாலும் பூமி மட்டத்திற்கு அதிகம்தாழ்ந்து ஓடுவதால் பாசன வேலைகளுக்கு அந்நதியின் ஜலம் உபயோகப் படுத்தப்படுவதில்லை. இந்நகரத்திற்கு சற்று வடக்காக ஒரு அணைகட்டி, இந்நதியின்ஜலத்தை ஒரு கால்வாய் மார்க்கமாய்க் கொண்டுவந்து சாகுபடிக்கு உபயோகிப்பதாயிருந்தால் ஏராளமான பூமிகளில் நஞ்சைசாகுபடி செய்யலாம். விசேஷ இலாபத்தைக் குடிகள் அடையவும், கவரன்மெண்டாருக்கு அரசிறை அதிகப்படவும் காரணமாகும். கிணற்றுத் தண்ணீரை இறைத்தே கோதுமை, துவரை, கசகசா முதலியபல தானியங்கள் விளைவிக்கப்படுகின்றன. பருத்திஏராளமாகப் பயிரிடப்படுகிறது. குடிகள் அநேகமாய் விவசாயிகளேயன்றி பம்பாய் முதலிய நகரங்களிலிருப்பவர்கள் போன்று கைத்தொழில், வியாபாரம் முதலியவைகளை கைக்கொண்டவர்களன்று.

இப்பட்டணத்திற்கு சமீபத்திலிருக்கிற பட்டிப்பூர் சிக்கிரிஎன்னும் மலைத்தொடர்களில் வெட்டியெடுக்கப்படும் செந்நிறமானகற்களைக் கொண்டுவந்து செதுக்கி வேண்டியமாதிரி உருவாக்கி கட்டப்படுகிற ஒவ்வொரு கட்டட வேலைகளுக்கும் உபயோகிக்கிறர்கள். இக்கற்கள் நயப்படுத்துவதற்கு அதிக அநுகூலமானதாகவும், கட்டடவேலைகளுக்கு மிகுந்த உறுதியும் வன்மையுமுள்ளதாயிருக்கிறபடியால், இந்தபிராந்தியங்களில் இக்கற்களால் கட்டப்பட்ட கட்டடங்களே அதிகமாகக் காணப்படுகின்றன.

யமுனாநதிக்கு இரண்டு அடுக்குகள் வைத்து ஒருவிநோதமான பாலம் கட்டப்பட்டிருக்கிறது. கீழ்புறத்திலுள்ள அடுக்கில் ரயில் வண்டிகள் செல்கின்றன. மேலடுக்கில் ஜனங்களும், குதிரை, எருதுகளால் இழுக்கப்பட்ட வண்டிகளும் செல்லுகின்றன. இந்த பாலத்திலிருந்து சுமார் எழுபதடியகலத்தில் மூன்று மையில் நீளமுள்ள ஒரு பாதை போட்டிருக்கிறார்கள். இந்தப்பாதை நேராக டாஜ் மஹால் என்ற விநோதமான கட்டடம் வரையில் செல்லுகிறது. இவ்வளவு அகலமும் நீளமுமுள்ள பாதையானது ஒருவிதமான பலகைக்கற்களால் பாவப்பட்டு அதிக உறுதியாயும் குப்பை கூளங்கள் தங்க இடமின்றியும் வெகு இலக்ஷணமாகக் காணப்படுகின்றது. இந்தப்பாதையைப்போல் பட்டணத்திற்கு மத்தியில் சிற்சில தெருக்களில் கற்கள் பாவியிருக்கிறார்கள். இப்பாதைகளில் வண்டிகள் ஓடும்பொழுது பாறைகளின் மேல் ஓடுவதுபோலவே சப்தமுண்டாகின்றன. இப்பாதைகள் போடப்பட்டுஇரு நூறுவருஷமாயிற்றென்று சிலரும், இரெண்டாயிரம் வருஷமாயிற்றென்று சிலரும் கூறுகிறார்கள். பாதைகளிருக்கப்பட்ட ஸ்திதியை நோக்குங்கால் சுமார் 300-400 வருஷங்களுக்கு முந்திப்போடப்பட்டிருக்கலாமென்று தோற்றுகிறது. யமுனை நதிக்கரையில் ஸ்நானபானங்களுக்கு உபயோகமாக பல தர்மகுணசீலர்கள் ஏராளமான திரவியச்செலவு செய்து அனேகபடிக்கட்டுகளைக் கட்டியிருக்கிறார்கள். இப்படிக்கட்டுகள் பலசமயங்களில் உபயோகப்படாததாய் யமுனையில் ஜலமானது வற்றிப் படிக்கட்டுகளுக்கு வெகுதூரத்தில் ஓடுகிறது. அப்பொழுது பண்டாக்கள் என்ற ஜாதியார் தங்களுடைய பலகைகளையும், வெயிலுக்காகப் போட்டுக்கொள்ளும் குடிசைகளையும், பெருங்குடைகளையும் நதியின்ஜலத்திற்கு சமீபத்தில் கொண்டுபோய் வைத்துக்கொண்டு ஸ்நானத்திற்கு வருகிறவர்களை உபசரித்து தங்கள் பலகையின்பேரிலிருந்து யமுனாபூஜை, ஜபம்முதலியவைகளை செய்யச்சொல்லி, அதற்குக்கூலியாக கொடுத்ததைப் பெற்றுக்கொள்ளுகிறார்கள்.

இந்த யமுனாநதிக்கரையில் இப்பொழுதும் காணப்படும் சிற்சில பழஞ்சுவர்களைப் பார்வையிட்டால், இப்பட்டணமானது முன்காலத்தில் எவ்வளவு பெரியதாயிருந்திருக்குமோ எப்பேர்க்கொத்த மாடமாளிகைகளால் நிறைந்துவிளங்கியதோ, எப்பேர்க்கொத்தகனதனவான்கள் குடியிருந்தார்களோஎன்று பிரமிக்கும்படியான அப்பேர்க்கொத்த கற்களால் சுண்ணும்புச்சாந்திட்டுக் கட்டியதாயும் 5-6 அடி அகலமுள்ளவைகளாயும் காணப்படுகின்றன. பலர் கூறுகிறபடி இப்பட்டணமானது முன்னொருகாலத்தில் எட்டுமைல் நீளமும் 5 மைல்அகலமுமுள்ளதாயிருந்திருக்க வேண்டுமென்று நம்பப் போதிய காரணங்களும், அடையாளங்களும் காணப்படுகின்றன. முந்தியிருந்தபட்டணத்தில் பாதிபாகமே இப்பொழுது பட்டணமாக விளங்குகிறதென்று சொல்லலாம்.

இந்நகரத்தில் நடுநாயகமாக விளங்கும், கோட்டையிலிருந்து வடமேற்காக பட்டணத்திற்குள்செல்லும் தெருவு மிகவும் அழகானது. இத்தெருவின் இருபுறமும் ஐந்து,ஆறு அடுக்குகளுள்ள மெத்தைவீடுகளாலும், கூடகோபுரங்களுள்ள மாளிகைகளாலும், சிங்காரமான கட்டடங்களாலும் காணப்படுவதன்றி அவைகளில்பல வியாபார வர்த்தகசாலைகளும் வைக்கப்பட்டு, எப்பொழுதும் இத்தெருவில் ஜனங்கள் கணக்கிடமுடியாதபடி வந்துபோய்க்கொண்டேயிருக்கிறார்கள். இந்தத்தெருவும் பலகைக்கற்களால் பாவப்பட்டிருக்கின்றது. 'சவுக்' என்ற கடைத்தெருவில் உணவுப்பொருள்கள் மலைமலையாக குவிக்கப்பட்டு வெகுசகாயமாக விற்கப்படுகின்றன. சாயந்திரவேளையில் இச்சவுக்கண்டை ஜனக்கூட்டம்அதிகரித்து தெருவுடன் செல்கிறவர்களுக்கு வழியகப்படுவதே கஷ்டமாய் விடுகிறபடியால் போலீஸ்காரர்கள் சதாஜனங்களை குண்டாந்தடியைத் தூக்கிக்கொண்டு ஜா! ஜா! என்று கூவிக்கொண்டும், நிற்பவர்களை தள்ளிவிட்டுக்கொண்டுமே இருக்கிறார்கள். இச்சவுக்கிலிருந்து கிழக்காக மற்றொருதெருவு செல்லுகிறது. இந்தத்தெருவும் மெத்தைவீடுகளாலும் கூடகோபுரங்களாலும் வெகுவிநோதமாகவே காணப்படுகிறது. இந்தவீடுகளின் மெத்தைகளின்பேரில் பலஜாதியாரான தாசிகளும்வேசிகளும், குடிப்புகுந்து, தெருவில்செல்கிறவர்களுக்குத் தோன்றும்படியாக சோபா, நாற்காலி முதலியவைகளின் பேரிலுட்கார்ந்து வீணை, பிடில் முதலிய வாத்தியக்கருவிகளை வைத்து

க்கொண்டுபோடியும், உல்லாசமாக உலாவியும், கேலி, நகைப்பு, ஆட்டமுதலிய செய்கைகளில் குடிகொண்டவர்களாய்த் தோற்றப்படுகிறார்கள். இப்படியே ஒவ்வொருதெருவின் விநோதத்தையும் கூறின் வியாசம் பெருகுமென்றஞ்சி விடலானோம்.

இந்த நகரத்தில் கட்டப்பட்டிருக்கும் சில கட்டடங்கள் தேர்ந்தசிற்பிகளும் மேல்நாட்டு இஞ்ஜினீர்களும் வியக்கத்தக்கவைகளாயும், பூலோகத்திலுள்ள ஏழு ஆச்சரியங்களில் ஒன்றாகிய Taj Mahal டாஜ் மஹால் என்ற அற்புதமான கட்டடத்தை யுடையதாயும், மகாதர்மசீலரும் ஜீவகாருண்ணியருமான ஆக்பர் சக்கரவர்த்தியின் சமாதியும், இன்னும் பற்பல சிறந்த கட்டடங்களுமிருப்பதால் உலகத்தின் விநோதங்களைப் பார்க்க எண்ணமுள்ளவர்களாய் வெளிப்புறப்படுகிற ஒவ்வொருவரும் இவ்விடத்திற்குவந்து எட்டு அல்லது பத்துநாள் தங்குவதால் வீட்டுவாடகை அதிகப்பட்டிருப்பது அதிசயமன்றென்றே கருதலாம்.

கோட்டை.—இது சுமார் 700 வருஷங்களுக்குமுன் பட்டிப்பூர் மலையில் வெட்டி எடுக்கப்பட்ட சென்னிறமான கற்களால் ஆக்பர்பாதுஷா அவர்களால் கட்டப்பட்ட ஒரு அந்தமான பெரிய கட்டடம். இது யமுனையாற்றின் ஓரமாக சுமார் 5 பர்லாங்கு நீளமும் இரண்டரைபர்லாங்கு அகலமுமுள்ளதாய், சுமார் 45 அடி உயரமும் 20 அடி அகலமுமுள்ள மதில்சுவர்களுள்ளதாயும், சுற்றியும் பலவட்டமான வளைவுகளுடன் பெரும் அகழோடும்கூடியது. இந்த அகழில் யமுனையாற்றின் ஜலத்தைக்கொண்டுவர வழியும் செய்திருக்கிறார்களாயினும், இப்பொழுது அகழில் ஜலம்விடப்படுவதில்லை. இப்பொழுது இந்தக் கோட்டைக்குள் கொஞ்சம் பட்டாளம் வைக்கப்பட்டிருக்கிறது. இதற்குள்ளிருக்கிற Motee Masjid முத்து மஸ்ஜீத் ஷாஜீஹான் கட்டியதென்று தெரியவருகிறது. மூன்று வரிசையான 54 வெள்ளைக்கல் ஸ்தம்பங்களையுடையதாய் 540 புருஷர்கள் உட்கார்ந்து ஜபம்செய்ய இடம் குறிக்கப்பட ஒரு பெரிய அறையையும், அதற்கு அடுத்தபுறத்தில் 60 கோஷா ஸ்திரீகள் உட்கார்ந்து ஜபம் செய்ய இடம் குறிக்கப்பட்ட ஒரு சிறிய அறையையும் உடையதாய், விநோதமான ஸ்தூபிகளுடன் வெள்ளைக்கற்களாலேயே 250 அடி நீளமும் 200 அடி அகலமும் கொண்டதான கட்டடம். இதற்கு முன்புறத்தில் விசாலமான ஒருமேடையும் அதில் ஜபம்செய்பவருகிறவர்கள் கைகால் முதலியவைகளை சுத்தஞ்செய்துக்கொள்ளத் தக்கதான ஒரு தடாகமும் காணப்படுகிறது. இந்தக்குளத்திற்கு யமுனையாற்றிலிருந்து குளாய்மூலமாய் ஜலம்வருகிறது.

ஷாஜீஹான் அரண்மனை.—இதுவும் வெள்ளைக்கற்களால் கட்டப்பட்டது. தரை வெள்ளை கருப்புச் சதுரக்கற்களால் பாவப்பட்டிருக்கிறது. இந்த அரண்மனையின் ஓரறையானது கட்டடத்தின் சுவர்களிலும் மூலைகளிலும் பொன்முலாப்பூச்சினால் பூங்கொடி வேலைகள் செய்யப்பட்டிருந்ததாகவும் கலகத்தில் பரதப்பூர் கொள்ளைக்காரர்கள் அவைகளை சுரண்டிக்கொண்டுபோய்விட்டதாகவும், பிறகு அந்த மாதிரி பொன்முலாமிட மூன்று அடி நீளத்திற்கு இவ்வளவாகுமென்பதையறிய அங்கிலேயர் செய்துபார்த்ததில் 3000 ரூபாய் செலவானதாகவும், தெரியவருவதுடன் பிந்திமுலாமிடப்பட்ட பாகம் மட்டும் இன்றையவரையில் காணப்படுகிறது. இதற்கு அடுத்த பக்கத்தில ஷாஜீஹான்மனைவியார் வாசஞ்செய்த அறைகளும், படுக்கை அறையும், அவ்விடத்திலிருந்தே ஸ்னானத்திற்கு யமுனையாற்றுக்குச்செல்லும் நிலவறையுமிருக்கின்றன. இதில் படுக்கை யறை அதிஅற்புதமானது. மூலை முடக்குகளில்லாமலும், மேல் பாகம் வில் வளைவாகவளைத்தும் வெள்ளைக்கற்களாலேயே கட்டப்பட்டு சுவர் முழுவதும் சிகப்பு, வயிரம், பச்சைமுதலிய கற்களாலேயே பதிக்கப்பட்டு இரண்டு புறத்திலும் விசாலமான இரண்டு கட்டில்கள் போடும்படியாக மேடைகளமைத்தும், மத்தியில் நினைத்தவுடன் ஸ்நானஞ்செய்யத்தக்க விதமாயமைத்த தண்ணீர் வெந்நீர் குழாய்களுடன்கூடிய தொட்டியை யுடையதாய், கட்டப்பட்ட கட்டடம். இதற்கு சமீபத்தில் ஒருவன் காவலாக இன்றும் வைக்கப்பட்டிருக்கிறான். இவனுக்கு ஒரு அணா கொடுத்துவிட்டால் உள்ளே கூட்டிக்கொண்டுபோய் தீபமேற்றி செவ்வையாகக்காட்டுகிறான். அப்படி பார்க்கும்பொழுது நாம் உண்மையாக

வே ஒரு கட்டடத்தை பார்க்கிறோமென்ற எண்ணம்மறந்து கனவுதான் காண்கிறோமென்ற எண்ணமுண்டாய் பிரமிக்கச்செய்கிறது. நமது தேசத்தில் கட்டிக்கொண்டிருக்கப்பட்ட துணிகளை பலவித நிறத்துடன் ஜ்வலிப்பதால், அதை நேரில் பார்த்தவர்களுக்கேயன்றி மற்றவர்களுக்கு எவ்வளவு கூறியும் அதின் இலக்ஷணம் இவ்விதமானதென்று அறிவது சாத்தியமன்று. இதற்கு அடுத்த அறை நூர்ஜிஹான், ஷாஜ்ஹான் மனைவி உடுக்கும் அறை. இதில் வெள்ளைக்கற்களால் கட்டப்பட்ட சுவற்றில் நகை நட்டுகள் வைக்கும்படி பெரியதும் சிறியதுமான பல அறைகள் காணப்படுகின்றன. இப்படியே பல அறைகளும் மேடைகளும் காணப்படுகின்றன.

திவானீயம்.—இது ராஜாங்கவிஷயமான யோஜனைகள் செய்யப்பட்ட பெரிய ஹால். சுமார் 100 கஜ நீளமும் 30 கஜ அகலமுமுள்ளது. வெள்ளைக்கற்களாலேயே கட்டப்பட்டது. இரட்டை ஸ்தம்பங்களாகவே நான்கு வரிசையாக 40 ஸ்தம்பங்கள் வைத்து மேல் பாகத்தில் பலவித சித்திரங்கள் செய்தும், இதற்கு மேல் புறத்தில் ஸ்திரீகள் நின்று பார்க்கும்படியாக வெள்ளை கற்களில் செய்த திரைபோன்ற மறைவுள்ள இரண்டு சிறிய அறைகளுடன் கூடிய பெரிய கட்டடம். இந்த மண்டபத்தில் இராஜாங்க உத்தியோகஸ்தர்களுடன் ஆக்பர் உட்கார்ந்து பல விஷயங்களைப்பற்றி யோஜிப்பது வழக்கமாம்.

கசீனு மாஸ்க்கு.—இது இராஜ்ஜியத்திலுள்ள பெரியதனக்காரர்களுடன் சேர்ந்து ஆலோசனை செய்யப்பட்ட அறை. இதுவும் மூன்று வரிசையான 24 ஸ்தம்பங்களுடன் கூடிய பெரிய ஹால். வெள்ளைக்கற்களாலேயே கட்டப்பட்டது. இந்த அறைக்கு எதிர்புறத்தில் 40 அடி சுற்றளவுள்ள ஸ்படிகக்கல் விருந்ததாகத்தெரியவருகிறது. இப்பொழுதும் ஒருமேடையின்மேல் 40அடி சுற்றளவுள்ள ஒரு கருங்கல் போடப்பட்டிருக்கிறது. இக்கல்லின் பேரிலுட்கார்ந்து பார்த்தால் 60 அடி பள்ளமான 5-6 பள்ளத்தாக்குகள் சுற்றியும் காணப்படுகின்றன. இந்த பள்ளங்களில் புலி, யானை முதலிய மிருகங்களை சண்டைக்குவிட்டு ஆக்பர் மேற்படி கல்லின் பேரிலுட்கார்ந்துகொண்டு வேடிக்கை பார்ப்பது வழக்கமாம் மற்றும் சிலபள்ளங்களில் பெரும் மீன்கள் விடப்பட்டிருக்குமாம். இந்த கல்லிற்கு அடுத்த கட்டடமாகிய இந்து ராஜஸ்திரீகளை வைத்திருந்த அறைச்சுவற்றின் பேரில் 15 அங்குல சுற்றளவுள்ள பீரங்கிக்குண்டு பாய்ந்து துளைத்தவளை இன்றுங் காணப்படுகிறது.

இந்த கசீனு மாஸ்க்குக்கு எதிரில் வடமேற்கு மாகாண லெப்டினெண்டு கவர்னராகவிருந்த மிஸ்டர் J. R. Colvin என்ற ஐரோப்பியருடைய தேகம் அடக்கம் செய்யப்பட்டு கல்லும் பதிக்கப்பட்டிருக்கிறது. தவிர ஷாஜ்ஹான் ஸ்நானஞ்செய்து வந்த பெரிய கல்தொட்டி யொன்றும் காணப்படுகிறது. இது சுமார் 6 அடி உயரமுள்ளதாய் மேலே ஏறிச்செல்ல நான்கு படிகள் வைத்து மிகவும் இலேசானதாய் செய்யப்பட்ட கல்தொட்டி.

இவைகளை எல்லாம் பார்த்துக்கொண்டு வந்தால் பேர்பெற்ற சோமநாத் கோவில் தலைவாயிலின் கதவு சுமார் 25 அடி உயரமும் 16 அடி அகலமுமுள்ளது. இதை இவ்விடத்தில் கொண்டுவந்து வைத்திருக்கிறார்கள். இது சந்தனமரம் என்பதாகவும், பொருக்கப்பட்டிருக்கிற ஆணிகள் வெள்ளி என்பதாகவும் தெரியவருகிறது. இது இவ்விடத்திற்கு வர வேண்டிய காரணம் தெரியவில்லை.

ஆகவே, இந்த கோட்டையைபோன்ற பலமானதும் அதிக வேலைப்பாடுள்ளதும், அநேக விசித்திர விநோதங்களைக் கொண்டதுமான கோட்டை அந்த தேசத்திலேயே இல்லை என்று கூறலாம். இந்தக்காரணத்தைக்கொண்டே இப்பொழுதும் இந்தக்கோட்டைக்குள்ளிருக்கிற கட்டடங்களை கவரன்மெண்டார் இடிக்காமல் காப்பாற்றி வருவதுடன் இதற்குள்ளாகவே இந்த ஜில்லா கஜானாவையும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

(இன்னும் வரும்.)

T. C. வேங்கட்டரமணய்யர்.

# *அவிழ்த்துவிட்டகழுதை.

(தொடர்ச்சி 4-வது.)

——.(*):——

திருச்சினப்பள்ளிக்குப் போனதில் எனக்கு ஏற்கனவே இருந்த கஷ்டங்கள் இன்னும் அதிகமாயின. அந்த ஊரைப்பார்த்தாலே எனக்குப்பிடிக்கவில்லை. சூரியனுடைய ஏற்கனவே உக்கிரமான வெயில்போதாதுபோல் அவ்வெயில் மலைக்கோட்டை என்று சொல்லப்பட்ட பாறையின் மேல் தாக்கி அங்கிருந்து எதிர்த்து வரும் கானலுடன் சேர்ந்து பகலில் தலையெடுக்க வொட்டாமல் கொளுத்திவிடும். தெருக்களில் கூழாங்கல்லைப்பரப்பிப் பாதைபோட்டிருக்குமாதலால் காலில் செருப்பில்லாமல் நடந்தால் கூறிய கற்கள் குத்திவிடும். செருப்புப்போட்டு நடந்தால் மழுங்கிய கற்கள் இடறிவிழச் செய்யும். திருச்சினப்பள்ளிக்குப் பூர்வ நாமம் திரிசிரபுரம்; அதாவது திரிசிரஸ் என்ற ராமாயணத்தில் சொல்லப்பட்ட ராக்ஷசன் குடியிருந்த இடமாம். ஊரைப்பார்த்தாலே ராக்ஷசன் குடியிருந்த இடமென்று நன்கு விளங்கும். ஏனெனில் ஒவ்வொரு வீடும தனித்தனித்தெருவாக இருக்கும். திரிசிரஸ் என்னும் ராக்ஷசனும் சூர்ப்பநகை என்னும் ராக்ஷஸியும் அப்பட்டணத்திலுள்ள வீடுகளை யெடுத்து உயரவீசி யெறிந்து அம்மானை ஆடினர்களாம். பாதி ஆட்டத்திலேயே ராம லக்ஷ்மணர்கள் யுத்தத்துக்கு வந்து விட்டமையால் வீடுகளாகிற அம்மானைகளை எறிந்தது எறிந்தபடிபோட்டுவிட்டு சண்டைக்குப் போய் மடிந்தார்களாம். ஆதலால் தான் இப்பொழுதும் வீடுகள் மூலைக்கொன்றாய் நிற்கின்றனவாம்; என்று காவேரீ மாகாத்மியத்தில் திரிசிரபுரஸ்தலபுராணத்தில் ஐந்தாவது அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆண்டாள் வீதி என்று சொல்லப்பட்ட தெரு எல்லாவற்றிலும் பெரியதெரு. அதில் இரண்டு வண்டிகள் எதிரே வந்தால் ஒதுக்கி ஒட்ட இடங்கிடையாது. ஆதலால் அந்தக் கோடியில் வண்டி நுழையும் போதே எதிர்க் கோடியில ஏதாவது வண்டி வருகிறதா என்று பார்த்து நுழையவேண்டும். இரவில் இருட்டு வேளைகளில் தெருவில் போடப்பட்ட ராந்தல் தன்னைச்சுற்றிலும் மூண்டுகொண்டிருக்கும் இருளை வழிநடப்பவர்க்கு நன்றாய் எடுத்துக்காட்டி "இதோ பார் இருள், ஜாக்கிரதையாய் நடந்துபோங்கள்" என்று எச்சரிக்கும். ராந்தலின் எச்சரிக்கையைக் கவனிக்காது அஜாக்கிரதையாய் நடந்து போனாலோ நடுத்தெருவில் நின்று கொண்டே தூங்கும் நம்போன்ற அவிழ்த்துவிட்ட கழுதைகள் மேல் இடறிவிழவேண்டும். வீடுகளில படுக்கை அறையின் ஜன்னலுக்குப்பக்கத்தில் சாக்கடையும், சமையலறைக்குப்பக்கத்தில் கக்கூசுமாகக்கட்டப்பட்டிருக்கும். வீட்டில் குடியிருப்பவர்களுடைய சம்சாரங்கள் விருத்தியடைந்தாலும் அடையாவிட்டாலும், மூட்டுப்பூச்சி, கொசுகுக்களுடைய சம்சாரங்கள் தாராளமாய் விருத்தியாகிக்கொண்டிருக்கும். திருச்சினப்பள்ளி மூட்டுப்பூச்சிகள் வெகு தந்திரசாலிகள். இரவில் அவைகள் கடிபொறுக்க மாட்டாமல் படுக்கையைவிட்டெழுந்துவிளக் கேற்றினால், நெருப்புக்குச்சியை இழுத்து விளக்கில் நெருப்புப்பிடிப்பதற்குள்ளாக அவ் வெளிச்சத்தைக் கண்டவுடனே எல்லா மூட்டுப்பூச்சிகளும் நம் படுக்கைவிட்டுச் சுவற்றிலேறித் தங்கள் வளைகளுக்குள் நுழைந்துவிடும். ஆனால் அவ்வூரிலேயே பிறந்து வளர்ந்தவர்கள மட்டும் எப்படியோ அப்பூச்சிகளுக்குமத்தியில்தான் தூங்குகிறார்கள். ஒருக்கால் அப்பூச்சிகள் தங்கள் மனிதர் இன்னாரென்றும் அயல் மனிதர் இன்னாரென்றும் தெரிந்து உபத்திரவிக்கின்றனவோ என்னவோ. ஆதலால் நானும் என்னைப்போல் அயலூர்ப்பிள்ளைகளாகிய சிலரும் இரவில்எங்கள் ஜமுக்காளங்களை உதறி எடுத்துக்கொண்டு போய் காவேரிப் படித்துறையில் படுத்துக் கொள்ளவது வழக்கம். அங்கே கருங்கல் தரையாதலாலும் ஜில்லென்று நீர்க்காற்றடிக்குமாதலாலும் கொசுகு மூட்டுப்பூச்சிகள் வாரா. திருச்சினப்பள்ளிப் பையனொருவனை ஒரு தடவை எங்களூருக்கு அழைத்துக்கொண்டு போயிருந்தேன அவன் அங்கே தங்கியிருந்த மூன்றுநாளும் தனக்குத் தூக்கமே வரவில்லை என்று முறையிட்டான். ஏனென்று கேட்டதற்கு "திருச்சினப்பள்ளியில் மூட்டுப்பூச்சி கடிப்பது உடம்பை சொரிந்து

* தன்னையறிந்து தன் தொழிலில் பிரவேசிக்கும மனோதர்மசக்தி தடையறியாது.

கொடுப்பது போலிருப்பதுடன் நம்மையும் சொரிந்துகொள்ளச்செய்யும். மேலும் மூட்டுப்பூச்சி நம்மிரத்தத்தை சாப்பிட்டுவிடுவதனால் நமக்கு ஓர்வித அயர்ச்சி உண்டாகி நித்திரை நன்றாய்வரும். இக்காரணங்களில்லாமையால் இங்கே தூக்கம் வரவில்லை'' என்றான்.

பள்ளிக்கூடத்துக்கருகாமையால் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பிராமணப்பிள்ளைகள் சாப்பிடுவதற்கென்று ஒருகட்டடம் ஏற்படுத்தி சமையற்காரர்களும் வேலைக்காரர்களும் மணியகாரர்களும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். ஆளுக்கு ஆறு ரூபாய் கொடுத்து சுமார் நூறுபிள்ளைகள் அங்கே சாப்பிட்டார்கள். திருச்சினாப்பள்ளிநெல் கற்பாறை நிறைந்த நிலங்களில் விளைந்த நெல்லாதலால் அரிசியில் படிக்குப் பாதி கல்லாகவேயிருக்கும். ஒரு பிடிசாதம் விழுங்கினால் அதில் இரண்டு கல்லுக்குக்குறையாமல் அகப்படும். சில கெட்டிக்காரப்பிள்ளைகள் சாதத்தைக் கடித்துசாப்பிட்டால் தானே கல்லகப்படுகிறதென்று நினைத்துக் கடிக்காமலே விழுங்கிவிடுவார்கள். எனக்கு அப் பாம்பின்வித்தை தெரியாது. கடித்துத்தான் சாப்பிடத்தெரியும். பரீக்ஷார்த்தமாக ஒரே ஒருகல்லை சாதத்தில் கலந்து பரிமாறினாலும் முதற் கவளம் எடுத்துப்போட்டுக்கொள்ளும்போதே அது என் வாயிலகப்பட்டுவிடும். வாயில் கல்லகப்பட்டுவிட்டாலோ அந்தக்கவளத்தை அப்படியே உமிழ்ந்துவிடுவேன். ஆதலால் கல்லகப்படாத கவளத்தைமட்டுமே சாப்பிட்டு உயிர் தரித்திருந்தேனென்றால் என் உடம்பு எப்படியிருந்திருக்குமென்று நீங்களே அறிந்துகொள்வீர்கள். ஆனால் என்னையுமறியாமல் என்வயிற்றில் புகுந்த குட்டிசுவாமிகளை யெல்லாம் சேர்த்தால் பெரிய சுவாமிக்கு என்வயிற்றிலேயே ஒரு கோவில் கட்டியிருக்கலாமென்று நினைக்கிறேன்.

அங்கிருந்த சமையற்காரர்களிடத்தில் சுசி ஆசாரம் என்பது கிடையாது. வீணாய் அவர்கள்மேல் பழிசொல்வதில் பயனில்லை. அவ்வளவு தூரம் பார்த்தால் அவர்களுக்கும் கட்டாது. முதற்பந்தி சாப்பிட்டெழுந்ததும் இலைகளை யெடுத்தெறிந்துவிட்டு அப்படியே மறுபந்தி போடவேண்டிவரும். இருப்பது ஒரே குழாய்தான். அதற்கு நேராகக் கீழிருக்கும் தண்ணீர்த்தொட்டியில் தண்ணீர் விழுந்துகொண்டேயிருக்கும். அதிலிருந்து தண்ணீர் எடுத்துத்தான் சில பிள்ளைகள் குளித்துக்கொண்டிருப்பார்கள். சிலர் பல் துலக்கிக் கொண்டிருப்பார்கள். வேலைக்காரி சமையற்பாத்திரங்களைத்தேய்த்துக்கொண்டிருப்பாள் சமையற்காரர்கள் குடிக்க தீர்த்தமும் சமைக்க ஜலமும் கொண்டுபோவார்கள். குழாயிலிருந்து நேராகப் பாத்திரத்தில் ஜலம் விழுந்து பாத்திரம் நிறையும் வரையில் யாருக்கும் காத்துக்கொண்டிருக்க முடியாது. அப்படி காத்துக்கொண்டிருந்தால் வேலை நடவாது. பத்து மணிக்குள் நூறு பிள்ளைகளுக்கும் சாப்பாடு போட்டனுப்பிவிடவேண்டுமாதலால் சமையற்காரர்களுக்குக் காலையில் முழுக நேரம் கிடையாது. குளிக்காமலே தான் சமைப்பார்கள். அப்படியே தான் சாதம் போடுவார்கள். அது எனக்குப் பிடிக்காது. சில சமயம் பகலில் சமைத்த சாதத்தை இரவிலும் இரவில் சமைத்த சாதத்தைப் பகலிலுமாகக் கலந்து போடுவார்கள். ஒரே வீட்டில் நூறுபேருக்கு அவசரமாக சாப்பாடு போடுகிறதென்றால் எல்லாவிதமுந்தானிருக்கும். ஆதலால் நான் அதை ஒரு குற்றமாக இங்கெடுத்துச் சொல்லவில்லை. ஆனால் என் மனதுக்கும் உடம்புக்கும் அது ஆகவில்லை என்று சொல்லவந்தேனே யொழிய வேறொன்றுமில்லை. ஆனால் சென்னைப்பட்டணத்தைப்பார்த்த பிறகு திருச்சினாப்பள்ளி பாதகமில்லை என்று எனக்குத் தோன்றிற்று. இப்பொழுது எனக்கெல்லாம் ஒத்துப்போய் விட்டது. உலகமே எங்கும் இப்படித்தானிருக்குமென்றால் அப்புறம் ஒத்துக்கொள்ளாமல் என்னசெய்கிறது? நான நாற்பதுவருஷத்துக்கு முந்திய சமாசாரத்தைச் சொல்லுகிறேனாதலால், திருச்சினாப்பள்ளியிலிருக்கும் இக்காலத்திய பட்டணவாசிகளும், உத்தியோகஸ்தர்களும் சமையற்காரர்களும் என் பேரில் கோபித்துக் கொள்ளாமலிருப்பார்களாக.

இம்மாதிரி மனதுக்கு அருவருப்பானசாப்பாட்டை சாப்பிட்டதனாலும் அதையும் வயிறு நிறைய சாப்பிடாமையாலும் ஊரை விட்டு ஊர்வந்ததினாலும் எனக்கு ஒரு வரு

ஊத்துக்கெல்லாம் வியாதிகண்டு சாகும்தருவாயில் கொண்டுவந்துவிட்டது. வியாதி மிதமிஞ்சிப் போகிறவரையில் நான் என் தகப்பனருக்கு சௌக்கியமாயிருப்பதாகவே கடிதம் எழுதிவந்தேன். பிறகு எனக்குப்பள்ளிக்கூடத்துக்குப்போகக்கூட சக்தியில்லாமற்போகவே உபாத்தியாயரே பார்த்து "நீ படிக்கவேண்டாம் ஊருக்குப்போ"என்று சொன்னமையால் என் தோழிப்பிள்ளைகளிலொருவன் என் தகப்பனருக்கும் மாமனருக்கும் (எனக்கு அப்பொழுதே கலியாணமாகிவிட்டது) என்னை அழைத்துக்கொண்டு போகும்படி கடிதம் எழுதினன். அவர்கள் அப்படியே வந்து என்னை அழைத்துப்போனார்கள். போய் ஆறுமாதம் யமனேடு போராடினேன். அப்போரில் எனக்கு உற்றதுணையாயிருந்து உதவியவள் என் தாய்தான்.

நான் பிழைத்தெழுந்திருக்கிறவரையில் அவள் துயிலறியாள். நான்கண்ணயரும்போது கடைசியாக என்மனதிற்பதியும் உருவம் அவள் முகமே. நான் கண்விழிக்கும்போது முதலில் பார்ப்பதும் அவ்வுருவே. நான் சிறுபிள்ளையாதலால் அதைரியப்படுவேனென்று தானே என்னவோ, அவள் கண் கலங்கினதேயில்லை. எப்பொழுதும் ஒரே நிதானமான சாந்தமான பார்வையைத்தவிர வேறுவிதமான பார்வை அக்கண்களுக்குக் கிடையாது. ஒரே ஒருதடவை அவளுக்கே நான் பிழைக்கமாட்டேனென்று அதைரியமுண்டானகாலத்தில் என்னைத்தடவிக்கொடுத்து "அப்பா நீ ஒன்றுக்கும் பயப்படாதே, நீ என்னை மறவாமல் மட்டுமிருந்தால், நீ எங்கேபோனாலும் அங்கிருப்பவர்கள் என்னைக்காட்டிலும் பதின்மடங்கு அதிக ஆதரவுடன் உன்னைக் கவனித்துக்கொள்ளக்காத்திருப்பார்கள்" என்று சொல்லிவிட்டு ஸ்ரீகிருஷ்ணபகவான் தன்னைத்தெரிந்து சரணமடைந்த பீஷ்மவிதுராதிகளான மகாயோகிகளுக்கும், தெரியாமற் சரணமடைந்த அர்ஜுனன் திரௌபதிமுதலிய நரர்களுக்கும், கேவலம் மிருகஜாதிகளான பசுக்களுக்கும் எப்படி விளையாட்டுப்போல் சமயத்தில் வந்து உதவி புரிந்தார் என்பதைக்கர்ணமிருதமான வசனங்களால் தேவகானம் போன்ற அவள் வாக்கினால் சொல்ல ஆரம்பிக்கவே நான் புளகாங்கிதனாய் தேகஸ்மரணையற்று அந்த அமிருதவர்ஷத்தைப்பருகினேன். இப்பொழுது அதை நினைத்துப்பார்க்கையில் இன்னொருதரம் அம்மாதிரி வியாதி வந்து அம்மாதிரி வசனங்களைக்கேட்க வேண்டுமென்ன பேரவா உண்டாகிறது. இம்மாதிரி, மனிதர்களால் கைவிடப்பட்டஸ்திதியில் மூன்றுநாள் யமனேடு என் அற்பபலத்தாலும் புத்தியாலும் விடேன் கொடேன் என்று போராடினேன். ஏதோ என் தாயின் பாக்கியமோ, என் மனைவியின் புண்ணியமோ, அல்லது தாலுக்கா கச்சேரிக்கு உழைக்கவேண்டியது பாக்கி இருந்ததனலோ, பிராணபயமில்லையென்று சொல்லும்படி பிழைத்தெழுந்தேன்.

வியாதி தெளிந்ததும் வேறு மனிதனானேன். வியாதியைப்போல் மனிதனைச் சீர்திருத்தக்கூடிய வைத்தியன் வேறில்லை. அப்பொழுதே எனக்குச் சிறுபிள்ளைத்தனமான விளையாட்டுப் புத்திபோய் பாரபுத்தி வந்தது. அப்பொழுது தான் என்னுள்ளங்கரைந்து, மனமுருகிற்று, ஹிருதயம் மலர்ந்தது. உயிரின்பெருமையும், உணர்வின் அருமையும் இப்படிப்பட்டதென்று தெரிந்தது. "என்னுடைய ஜன்மவிரோதிக்கும் இந்த மாதிரி அவஸ்தைநேரவேண்டாம்" என்றுதோன்றிற்று. எல்லா உயிரும் இவ்வளவு நுட்பமானது தான் என்றறிந்தேன். துக்கம் என்பது சரீரத்தைப்பற்றினதானாலும் மனதைப்பற்றினதானாலும் மகாபரிசுத்தமானது. மதிகெட்டமாந்தரை நல்ல வழிக்குத்திருப்பும் ஆத்மபந்து. சிநேகிதர்கள் சில சமயம் நம் குற்றங்குறைகளை நமக்கெடுத்துக்காண்பிக்க பயப்படுவார்கள். துக்கமோ ஒன்றுக்கும் அஞ்சாத சிநேகிதன். அதைப்பரிஹஸிக்கவாவது இகழவாவது ஒண்ணாது. ஒரு நோயாளிபடுத்திருக்கும்அறை உண்மையான யக்ஞபூமி. நோயாளியின் அஹங்காரமே பசு, துக்கமே ஹோதா, பக்கத்திலிருந்து சுச்ருஷை செய்பவர்களே ரித்விக், உபத்திரவமே அக்நி. இந்த யாகத்தின் சிரமத்தைப் பாராட்டாது முழுவதும் நிர்வகித்து நடத்தக்கூடியவர்கள் ஸ்திரீகளே. மற்றஇடங்களில் அவர்களை எவ்வளவு தாழ்வாகப் பேசினலும் இவ்விடத்தில் அவர்களுடைய உதவியில்லாவிட்டால் ஒன்றும்நடவாது. தினந்தோறும் சவத்தின்முகத்தில் விழிக்கும் வைத்தியர்களால் சகிக்கமுடியாத காரியங்களைக்கூட

ஸ்திரீகள் ஸஹித்துத் தைரியமாய்ச் செய்வார்கள். (இங்கேசொல்வது கொஞ்சம்வயதான ஸ்திரீகளைத்தான். ஆதலால் இதைப் படிக்கும்சிறுமிகள் கர்வமுடையவேண்டாம்). நோயாளியின்ஜாடைகள் அவர்களுக்குத்தான் தெரியும். அவனுக்கு தாகமுண்டானால் அது இவர்கள் நாக்கிற்குத்தெரியும். பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்குமுள்ள சம்பந்தம் த்வைதமா, அத்வைதமா, விசிஷ்டாத்வைதமா என்கிற சண்டைக்கு இவர்களிருக்கு மறையில் நுழையவழி கிடையாது. பரோபகாரமாக என்னகாரியம் செய்பலாம்என்று இவர்களுக்கு யோசிக்கத்தேவையில்லை. கொஞ்சநேரத்துக்குத் தானென்றாலும் அந்த அறையில்மனிதனுடைய அகங்காரமும் அற்பத்தனமும்பிதற்றலும் அடங்கியிருக்கும். கொஞ்சங்கொஞ்சமாய் அங்கிருப்பவர்களெல்லாம் தங்களுக்குள் அந்தர்யாமியாயிருக்கப்பட்ட பொதுப்பொருளை உணர்கிறார்கள்; வெளிவேஷம் போய் உள்ளன்பு பிரகாசிக்க ஆரம்பிக்கிறது. ஆதலால் அந்த இடத்தைக் கோவில் என்பதற்குத்தடை யென்ன? இப்படிப்பட்ட அனுசாரமான கோவிலிலும், விருதாகண்டக்ஷோபத்தைத்தரும் புஸ்தகங்களுக்கப்பாலான பள்ளிக்கூடத்திலும்தான் கிறிஸ்துமுதலிய மகாத்மாக்கள்தொழுது படித்துத்தேறினார்களென்றால் அதில் ஆச்சரியமென்ன?

ஆனால்வியாதியையும் உளவறிந்து பொறுத்தால் தான் பொறுக்கக்கூடும். வியாதி என்பது நம்பழைய வினைகளைப்போக்கி வட்டியும் முதலுமாய்ப் பழையகடன்களைத் தண்டிக்கொண்டுபோக வந்த கடன்காரன் என்றறிந்தும், அந்த நாட்டுக்கோட்டை செட்டியினிடத்திலேயே மேன்மேலும் அதிக வட்டிக்குக்கடன்வாங்கஆரம்பித்தாலென்னபிரயோஜனம்! ஆதலால் ஒவ்வொரு கடன்பத்திரமாக எடுத்துக் கிரமமாக பைசல்செய்து கிழித்துப்போடவேண்டுமே யல்லாது பத்திரங்களைப் புதுப்பித்தல் முழுமுட்டாள் தனம். உண்மையாகப்பார்த்தால் ஒவ்வொரு கடனைத் துலைந்துகொண்டிருப்பதில் கடன்பட்டவனுக்கு சந்தோஷமேயொழிய வருத்தமென்ன? நாம் கடன்காரனுக்குக்கொடுக்கவேண்டியதையெல்லாம் கேட்டவுடனே யோசியாமல் ஒளியாமற்கொடுத்துவிட்டால், அதனால் நாம் ஓட்டாண்டியானாலும் பிறகு நம்கதியைக் கண்டிரக்கமுற்றாவது அக்கடன்காரன் நம் பங்குக்கு ஏதாவதுகொஞ்சம்வைத்துவிட்டுப்போவான். ஆனால் நான் மட்டும் அக்கடன்காரனிடத்திலிருந்து தைரியம் என்னும் விலையிலாப் பொருளைத்திருடிக்கொண்டு விட்டேன். எப்படிக் கண்வலிக்கு வைத்தியமாகக் கண்ணில் கலிக்கத்தைப் போடுவதனாலும், தலைவலிக்கு வைத்தியமாகத்தலையில் கருங்கல்லைப் போடுவதனாலும், தேள் கொட்டின இடத்தில் கரண்டியைக்காய்ச்சி சூடுவதனாலும் மேற்படி உபாதிகள் நீங்குகின்றனவோ அப்படியே யமனோடு நேருக்கு நேராய் எதிர்த்துப் போராடின எனக்கு உலகத்தில் மற்ற எல்லா அவஸ்தைகளும் கொசுகு கடிப்பதுபோலத்தான். தூக்குப்போடுவதிலிருந்து மன்னிக்கப்பட்ட பழைய குற்றவாளியை மறுபடி கடுங்காவலுக்கனுப்பினால் "இதென்ன நான் பார்க்காதசிறைச்சாலையா!" என்கிறான். அதுபோலவே நானும் "நான் அன்றைக்கே போயிருக்க வேண்டியவன் தானே" என்று "நான் பிழைத்திருக்கப்பெற்ற ஒவ்வொரு நிமிஷத்தையும் சம்பளத்தில் சேராத மேல்வரும்படி." யாகபாவித்து சந்தோஷப்படுகிறேன். இதற்கு திருஷ்டாந்தமாக 25 வருஷங்கழித்து இரண்டாங்கடவை வியாதி வந்தபொழுது எனக்குத்தோன்றிய எண்ணங்களைப்பின்னால் எழுதும்போது படித்துப்பார்த்தால் நான் சொல்வது சரியென்று ஏற்படும். ஆதலால் இப்பொழுது எந்த நிமிஷத்தில் வேண்டுமானாலும் சாகத்தயாராயிருக்கிறேன். என் வாழ்நாளில் நான் எவ்வளவோ அவஸ்தைப்படப்போகிறேனென்றறிந்து எல்லாவற்றிலுங் கொடிதான மரணாவஸ்தையை முதலில் அனுப்பிய சர்வேசுவரன் கிருபையை என்னென்றுவாழ்த்துவேன்? ஆனால்இப்பொழுதுசொன்னதெல்லாம் உலகத்தார் நினைக்கிறபடி மரணம்என்பது ஒருபெரியதீங்காயிருக்கும்பக்ஷத்தில் தான். வேறுசிலர் நினைக்கிறபடி அது ஒரு நலமாயிருந்துவிட்டாலோ அப்பொழுது நான் சாகுந்தறுவாயில் "இவ்வளவு நாள் கழித்து இவ்வளவு அவஸ்தைப்பட்ட பிறகாவது நமக்கு இப்பெரு நலம் கிடைத்ததே" என்று கடவுளைவாழ்த்துவேன்.

ஆறு மாதத்திற்குப்பிறகு உடம்பு கொஞ்சம் சௌக்யமானபிறகு மறுபடியும் திருச்சினாப்பள்ளிக்கே படிக்கப்போனேன். ஆனால்

இந்தத்தடவை எனக்குச் சமைத்துப்போட உதவியாக என் தாயாரையும் அழைத்துப் போனேன். அவளும் அது வரையில் அயலூருக்குப் போனதில்லை. பட்டணங்களில் குடியிருந்ததுமில்லை. எனக்காகவேதான் அவ்வளவு தூரம் முன்பின் பாராத ஊருக்கு மூட்டை முடிச்சுகளையெல்லாம் தூக்கிக்கொண்டு வந்தாள். நான் இந்த மாதிரி தாலூக்கா கச்சேரிக்கு வந்து சேரப்போகிறேனென்றறிந்திருந்தால் இவ்வளவு தூரம் என் தாயாரை அனுவசியமாய் அலையவைத்திருக்கமாட்டேன். படிப்பையே நிறுத்தியிருப்பேன். ஏனெனில் இந்தக் கச்சேரிவேலை செய்வதற்கு எனக்கு அப்பொழுது தெரிந்தபடிப்பே போதுமானது. என் தகப்பனர் மட்டும் எனக்கு மெட்றிகுலேஷன் பரிக்ஷையாவது தேறிவிட்டால் கூடிய சீக்கிரத்தில் தாசில் வேலையாவது கிடைக்கும் என்று எண்ணியிருந்தார். எனக்கும் இங்கிலீஷ் பாஷையைப்படிப்பதில் ஓர்வித உத்ஸாக மிருந்தமையாலும் சம்மதித்துப் படித்துவந்தேன். என் தகப்பனர் என் படிப்பு விஷயமாய் விற்றது போக மிகுந்த சொற்ப நிலத்தை சுவயமாகவே பாடுபட்டுப் பயிர்செய்து வந்தார். ஆகலால் அவர் ஊரைவிட்டுத் திருச்சினப்பள்ளிக்குவர சரிப்படவில்லை. வீட்டில் சகாயத்துக்கு வேறு மனுஷியாளு மில்லாமையால் தானே சமையல் செய்து சாப்பிட்டுவந்தார். சாவகாசப்பட்டபொழுது திருச்சினப்பள்ளிக்கு வந்து என்னைப்பார்த்துவிட்டுப்போவார். இம்மாதிரி ஒருவருஷத்துக்குமேல் படிக்க வேண்டியிருந்தது.

(இன்னும் வரும்.)

---

## சங்கரப் பிரியன்.

### I. பீடிகை.

அனேக நூற்றாண்டுகளுக்கு முன்னர் தஞ்சைமாநகரில் நீதிமான் என்றொரு அரசன் தனது தேவி பத்மாவதி என்பவளோடு சிங்காதனத்தின்கண் வீற்றிருந்து செங்கோல் நடத்திக் கொண்டிருக்கும் ஒரு நாள் சந்ததி இல்லாமல் இறந்துபோன ஒரு பெருத்த தனவந்தனுகிய வணிகனொருவனது சொத்துக்கள் இராஜாங்கத்தைச் சேரவேண்டியது என்று தீர்மானிக்க நேர்ந்தது. சபை கலைந்தபின்னர், அரசன் தன் மனைவியோடு அந்தப்புறம்புக்கு பின்வருமாறு சம்பாஷிக்கலாயினன்.

பிரியே! பத்மினி! இன்றைபதினம் நாம் கடைசியாய்த் தீர்மானம் செய்த விஷயத்தைப்பற்றி யோசித்துப்பார்க்கின், சின்னாளுக்குப்பின்னர், நாம் ஆண்டுவரும் இவ்விராச்சியமும், நமது வமிசத்தைவிட்டு அன்னிய வமிசத்திற்குத் தான் சேர்ந்துவிடுமோ என்ற கவலை என்னைப்பாதிக்கின்றதே! என்செய்வேன்! ஈசுவரா! ஈசுவரா! என்று சொல்லிக்கொண்டு மூர்ச்சையாய் விழுந்தனன்.

பத்மினி, யாராலே எதுவாகிலும், சுகிர்தமோ, துஷ்கர்ம்மமோ எது லப்யமோ, அது வந்து தீரும்.

சோராதே! அவனன்றி யோரணுவு மசையாது. ஹே நாத! துவத் ஆஞ்ஞாபாலத்.

தீனதயா! ஏது உம் கிருபையா! ஹேமூல மூலப்பிரபோ இந்த கோராபத்திலிருக்குமென்னைத் துரையாய் ரட்சித்தருள்! நாராயணா!' என்று, கஜேந்திரன் முதலையின் வாயில் அகப்பட்டுத் தத்தளிக்கும் சமயத்தில் பகவானைத் துதித்துக்கொண்ட மணிப்பிரவாளச் சுலோகத்தைச் சொல்லிக்கொண்டு தனது கணவனருகிற்சென்று, அவரது தலையை எடுத்து மடிமீது வைத்துக்கொண்டு முகத்தில் பன்னீர் தெளித்து, மயில்விசிரி கொண்டு விசிரி சைத்தியோபசாரம் செய்ய, நீதிமானும் பிரஞ்ஞை தெளிந்து எழுந்து உட்கார்ந்தான்.

பிறகு பத்மினி கணவனைப்பார்த்து "நாதா! ஏது தாங்கள் இன்றையதினம் மனோதைரியத்தை முற்றிலும் துறந்தது! கொஞ்சநாளுக்கு முன்னர் நான் தங்களுக்குத் தெரிவித்த கனவும் பொய்யாகப் போகுமென்று நினைக்கத்தகுமோ? அக்கனவும் பின்வருவனவற்றை முன்னதாக நமக்கறிவித்து நமது மனக்கவலையை ஒருவாறு ஆற்ற பகவானால் உண்டாக்கப்பட்டதென்பதற்கும் யாதேனும் ஐயமுளதோ! என்றுசொல்லிக் கணவனது மனக்கவலையை ஆற்றினள்.

பத்மினி தான்கண்ட கனவு பொய்யாகாதென்று கணவனிடம் அவ்வளவு உறுதியாகச்

சொன்னகாரணம் யாதெனின், அவள் தன் தேகத்தின்கண் கருப்ப சின்னங்களை உணர்ந்தது தான். இதைக் கணவனிடத்தில் வெட்கத்தினால் வெளிப்படையாய்ச் சொல்லாமல் கொஞ்சம்மறைவாய் தான் கொஞ்சநாள்களுக்கு முன்னால் இரட்டைக்குழந்தைகளைப்பெற்றதாகக் கண்ட கனவு பொய்யாகாதென்று சொன்னாள்.

அரசனும் அதிக புத்திசாலியாகையால் தனது மனைவியின் சொற்களைச் சற்று ஆலோசித்துப்பார்த்து வாஸ்தவமின்னதென்று அறிந்துகொண்டு இராச்சியம் தனது மரபினின்றும் வெளியேறாதென்றும் தனக்குப்பின் இராச்சியபாரத்தை வகிக்கவும் தனக்குஎள்ளுந்தண்ணீரும்இறைக்கவும் கூடியசீக்கிரத்தில் மக்கட்பேறுண்டாவது நிச்சயமென்றுமுணர்ந்துஆனந்தபரிதனானான். பிறகு சில காலம் சென்றது.

## II.

### பிரசவ வேதனை.

மந்திரி ஞானசீலன்:—ஆரடா அது வாயிலில்!

வாயில் காப்போன்:—சாமி, சாமி, சாமி நாந்தாஞ்சாமி இருளன்.

மந்திரி:—அடே இருளா ஓட்டமாய் ஓடி ஜோசியம் சோமசுந்திரசாஸ்திரிகளை! மஹாராஜா கையோடு அழைத்துவரச் சொன்ன தாய்ச்சொல்லி அழைத்துவா பார்ப்போம்.

சேவகன்:—இதோ பூட்டேன் சாமி! இதோ இட்டுகிட்டு வந்துட்டேன் சாமி! என்று சொல்லி ஓட்டம் பிடித்தான்.

மந்திரியும் உள்ளேபோய் அப்பொழுதுதான் பிரசூதிகா கிரஹத்தினின்று சற்று வெளியே வந்த மருத்துவச்சியினிடம் எப்படியிருக்கிறதென்றும், இன்னம் சுமார் எவ்வளவு நேரம் செல்லுமென்றும் கேட்டார்.

மருத்துவச்சி:—எசமாங்களே தலைச்சன் குழந்தை அன்னா! கொஞ்சம் கஷ்டந்தான் அம்மணி படுவாங்கோ. தவிர இரட்டைப் பிள்ளைபிறக்கும் என்று தோண்றது. அப்படியானால் கஷ்டம் இன்னும் சாஸ்தி. எல்லாத்துக்கும் என்னாலே கூடினமட்டும் பாக்கிறேன் - என்று சொல்லி மறுபடி பிரசூதிகா கிரகத்திற்குள் போனாள்.

மந்திரி (தனக்குள்):—சந்தோஷம். இவ்வளவு நாள் கழித்தாவது நமது அரசனுக்கு சந்ததி உண்டாயிற்றே, மெத்த சந்தோஷம்! புருஷக் குழந்தையாய்ப் பிறக்கவேண்டும். மருத்துவச்சி இரட்டைக் குழந்தை பிறக்கும்போலிருப்பதாகச் சொன்னாள். நிரம்ப சந்தோஷம். ஒன்று பிள்ளையும் ஒன்று பெண்ணுமாகப்பிறக்கவேண்டும்.

## III.

### வேவுகாரர்கள்.

காளன் என்னும் அரண்மனை காக்கும் சேவகர்களில் ஒருவன் தலைதெறிக்க ஓடும் இருளனைக்கண்டு,—

இருளா! என்னடா. எங்கிடா தலைதறிக்க சிண்டு பறக்க ஓடறே! என்னடா விசேஷம்? பேயி கீயி உன்னே துறத்திக்கிட்டு ஓடிவறதா என்ன? சொல்லடா, சொல்லு.

இருளன்:—போடாபோ! சொல்ல இப்ப பொளுதில்லெ! அவசரமாப்போறேன். சர்க்கார்விசயம். தாமதப்படுத்தினே இன்னைத் தெரியும் பாரு!

காளன்: -தாமதப்படுத்தினா என்னடாதெரியும்? நெல்லுக்குள்ளே அரிசி இருக்குனு தெரியுமோ? இல்லை மட்டைக்கு ரெண்டுகீத்துனு தெரியுமோ? இவ்வளவுபேச்சுப் பேசினான்: சுருக்கி இதுக்காக இங்கேபோறே'ன்று ஒரு வார்த்தை சொல்லமுடியாதேபோச்சாம்! பாரேன்! இவினுக்குவந்திருக்கிற ஜுங்கியை.

இருளன்:—அடசனியே சொல்லித்தான் தொலைச்சுட்டுப்போரேன். நீ விடாமுண்டனாயிருக்காய். (காதுக்குள்ளே) அடே! ராஜா அக்கி இஇ இ இ தெரிஞ்சிதாடா தெரிஞ்சிதா?

காளன்:—என்னடா தெரிஞ்சிது? எனக்கு ஒரு இளவும் தெரியல்லே. நன்னா சொல்லடா இன்னா? 'இ இ இ தெரிஞ்கிதா 'இங்கிருய்? 'ராசாக்கி இ இ இ' என்னடா?

இருளன்:—எனக்கு சொல்லத்தெரிலேடா! தொண்டையிலே இருக்கிடா! வாயிலேவரமாட்டேங்கிறதடா.

காளன்:—நான் வேணாதொண்டையிலே ஒரு அமுக்கு அமுக்கி வாய்க்குக் கொண்டு வரட்டுமா?

இருளன்:—அடேபோடா எப்போதும் பரியாசம் தான், ஆசுபத்திரிலே ஒருபொம்பொ

ள்ளே இருக்காளே என்னமோ பேருவச்சிக் கிட்டு என்னமோ வேலேபண்ணிக்கிட்டு அவள் அரமனேக்கு வந்திருக்குருள் அவ் வேலேபண் ணிக்கிட்டு இருக்கிருளாம். மந்திரி எசமாங் கோ அடே இருளா ஓடிப்போயி சோசியம் சோ-சோ--சோமசாத்திரிபை இட்டுக்கிட்டு வாடன்னுரு. அதிக்குத்தாண்டாஓடரேன் பின்ன ஒண்ணுமில்லே. நேரமாப்போச்சு. ஏன்டா நேரமாச்சினு என்னே எசமாங்க கேட்டா காளன்புடிச்சிகினு விடமாட்டேன்னுன்னு சொல்லுப்பிடறேன். அப்புறம் இந்த தபால் கட்டு தூக்கிகினு ஓ—ருனே அவனேடி ஆரா வது பேச்சிக்குடுத்தா அவங்களுக்குப்பண்ண றதாச் சொல்லறுங்களே அப்படி உனக்கு ப்பண்ணுவாங்கோ (ஓடிப்போகிருன்,)

காளன்:—(தனக்குள்) மடைப்பயல். ராணி பிரசவவேதனேப் பட்டுக்கொண்டிருக் கிருள். ஜோசியம்பாக்க பாப்பானே இட்டுக் குட்டு வரப்போறேன்னு சுருக்கிச் சொல்லா தே கதை வளத்திட்டு, நான் மடக்கிக்கிட்டே ன்னு சொல்றேன்னு சொன்னுன். இருக்கட் டும். வரட்டும் கள்ளுக்கடைக்கு சாயங்கா லம் தவடையில் போடறேன். (போகிருன்)

## IV

### ஜோசிய பாடம்.

ஜோசியம் சோபசுந்தர சாஸ்திரிகள் திண் ணேயில் ஒரு பலகையின்மேல் உட்கார்ந்து சாய்மானத்தில் சாய்ந்துகொண்டு சிஷ்யர்களு க்கு ஜோசிய பாடம் சொல்லுகிருர்.

அடே ராமா, அந்த பிரஹத் ஜாதகத்திலே முதல் 10 சுலோகம் பழையபாடத்தை சிந் தனே பண்ணச்சொன்னேனே பண்ணிஆச்சா.

ராமன்:—ஆச்சய்யா.

ஜோசியர்.—அப்படியானுல் அந்த சுப்பு வுக்கு கேந்திரம் என்ருல்என்ன திரிகோணம் என்ருல் என்ன, எந்தெந்த கிரகங்களுக்கு எது எது உச்ச, நீச, ஸ்வ க்ஷேத்திர வீடுகள் என்று புதுப்பாடத்தை சொல்லிக்கொடு.

ராமன்:—அப்படியே அய்யா, (சுப்புவைப் பார்த்து,) அடே சுப்பு உன் செவிடிக்னே எடு த்துக்கொண்டு இப்படிவந்து உட்காரு.

ஜோசியர் (தன் மகனேநோக்கி): என்னடா முழிக்கிருய். பண்ணேக் கருப்பன் குழந்தை நேற்று பிறந்ததே. அதன் சாதகத்தைப் பார்க்கச் சொன்னேனே அதைப்பார்த்து விட்டா முழிக்கிருய். ராஜயோக ஜாதகமாய் இருக்கே எப்படி பண்ணேக்காரன் குழந்தை ராஜாவாகும் என்று முழிக்கிறையோ. அனு பவம்வேணுமப்பா அனுபவம்வேணும். "விரு த்தவைத்தியம் பால ஜோசியம்" என்று சொல்வார்கள். ஆனுல் அது சரியல்லவென் ன்ரு தோன்றுகிறது. நான் கிழவன் விரு த்த ஜோசியம். ஆயினும் நான் கறுப்பன் குழந்தையின் ஜாதகத்தின் ராஜயோகத்தைச் சொல்கிறேன் (அவ்விடம் நின்றுகொண்டிரு க்கும் கறுப்பனே நோக்கி) அடே கறுப்பா போ போ. உன்மகன் பெரியவன் ஆனுல் கூத் துலே ராஜா வேஷம்போட்டு ஆடுவான்போ. (மறுபடி மகனேநோக்கி:) பையா நிழலே அள ந்து இப்பொழுது எத்தனேநாழிகை ஆச்சுது என்றுபார். அகசைத்தள்ளிப்பார்த்தால் 25 நாழிகை என்று சொன்னுய்! நல்லது! (இதற் குள் இருளன்வந்து சாமிஎன்று கும்பிடுபோ டுகிருன்.)(நாழிகையின்மேல் ஆரூடம்பார்த்து) சரி! நமது அரசனுக்கு கூடிய சீக்கிரத்தில் புத்திரபாக்கியம் கிடைக்கப்போகிறதாக ஆரூ டம் தெரிவிக்கிறது. நல்லது இந்தப்பயல் இருளன் அரண்மனேயிலிருந்து வந்திருக்கி ருனே இவனேக் கேட்டால் அரண்மனேயின் சங்கதி தெரியவரும் (இருளனேநோக்கி: என் டா எங்கே வந்தாய்?)

இருளன்:—சாமி, மந்திரி எசமாங்க ஓங் களே கையோடே இட்டுகினு வரச்சொன்னுங் கோ.

ஜோசியர்:—அரண்மனேயில் என்னடா விசேஷம்?

இருளன்:—ஆசுபத்திரிக்காரி வந்திருக்கா. ஓங்களெ இட்டுகினு வரச்சொன்னுங்கோ! நம்மராசா குழந்தை பெறப்போறதாகத் தோ ணுது.

ஜோசியர்:—மடப்பயலே! 'ராசாவுக்கு'என் றுசொல்லடா.

இருளன்:—ஆஞ்சாமி ராசாவுக்குத்தான் ராசாவுக்கு.

ஜோசியர்:— பையன்களேப்பார்த்து அடே பசங்களா தெரியுமா புதுப்பாடத்தை நெட் டுருப் போட்டேட்டு பழைய பாடத்தை சிந்த னேபண்ணுங்கோள். நான் சற்றுவெளியே போய்விட்டு வருகிறேன். என்ன! நான் சொ ன்னது தெரிந்ததா? கம்பி நீட்டிவிடவேண் டாம்! (என்றுசொல்லிவிட்டு இருளனேடு போகிருர்.)

V.

புத்திர ஜனனம்

(அரண்மனையின் ஓர் அறையில் அரசனும் மந்திரியும்.)

அரசன்:—மந்திரி ஞானசீலா! ஜோசியம் சோமசுந்திரசாஸ்திரிகளுக்கு ஆள் அனுப்பினையா?

மந்திரி:—அனுப்பி யிருக்கிறேன் மஹாராஜ்.

அரசன்:—யாரையாவது அனுப்பி மருத்துவச்சியைக் கேட்டு வரச்சொல்.

மந்திரி:—இதோ அனுப்புகிறேன்மஹாராஜ். வெளியில் போய் 'ஆரடா அங்கே!'

சுவற்காரன்:—நான் தான் காளனுங்கோ.

மந்திரி:—அடே காளா நீ சீக்கிரம் பின்கட்டிற்குப்போய், மருத்துவச்சி வெளியே வந்தால்என்ன சமாசாரம் என்று நான் கேட்டதாகக் கேட்டுவா பார்ப்போம்.

காளன்:—அப்படியே சாமி. (போய்த் திரும்பி வருகிறான்.) வந்து 'சாமி!' என்று கும்பிடுகிறான்.

மந்திரி:— என்னடா சொன்னாள்?

காளன்:—சாமி! அம்மா ராணிஅம்மா இருக்கிராங்களே, அவங்களுக்கு மொதமுதலே ஒரு ஆண் குளந்தை பிறந்திச் என்றும் அப்பறம் ரண்டு நாழிக்கெல்லாம் இன்னொரு, ஆண் குழந்தை பொறந்திச்சின்னும் மருத்துச்சி சொன்னா. இன்னம் கொளந்தைகளுக்கு குளிச்சானு, தங்கத்தட்டிலே வச்சி ராசாக்கிக்காட்டக் கொண்டு வாறேன்னு சாமி!

மந்திரி:—சரி! நீ போய் வாயிலில் இரு. ஜோஸியம் சோமசுந்தர சாஸ்திரிகள் வந்தால் உள்ளே அழைத்துக்கொண்டுவா.

காளன்:—அப்படியே சாமி! என்று சொல்லிப்போய் சாஸ்திரிகளை மந்திரியிருக்குமிடம் அழைத்துக்கொண்டு வருகிறான்.

மந்திரி:—சாஸ்திரிகளவாள் வரணும்! என்று சொல்லி அரசனிருக்கும் அறைக்கு அழைத்துப்போகிறார்.

அரசன்:—ஜோஸியரவாள்! வாருங்கோள். வாருங்கள். உட்காருங்கோள்—என்று சொல்லி ஒரு ஆசனத்தைக்காட்ட, ஜோஸியரும் அதில் உட்கார்ந்து அரசனைப்பார்த்து:—

நிரம்ப சந்தோஷம். இவ்வளவு நாள் கழித்தாவது மஹாராஜா அவர்களுக்கு சந்தானம் உண்டாயிற்றே சிவகிருபை! குழந்தைகள் பிறந்தது எத்தனை நாழிகைக்கு?

மந்திரி:—ஜலோதயம் இரண்டரை மணிக்கு; சிரோதயம் மூன்றரைமணி ஐந்து நிமிஷத்திற்கு பூஸ்பர்சம் சரியாய் நாலுமணிக்கென்றும், முதல் குழந்தை பிறந்து ஒருமணிக்குப் பிறகு இரண்டாவது குழந்தை பிறந்த தாகவும் தெரிவித்தார். ஜாதகத்தையும் கணித்துப்பார்த்து, இப்பொழுது குழந்தைகளையும் இவ்விடம் கொண்டுவர ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சாமுத்திரிகாலக்ஷணத்தையும் பார்த்து பலாபலன்களை மஹாராஜா அவர்களுக்குத் தெரிவியுங்கள்.

இதற்குள் இரண்டு தாதியர்கள் குழந்தைகள் இரண்டையும் இரண்டு தங்கத்தட்டில் ஏந்திக்கொண்டு அவ்விடம் வந்து நிற்க, அரசனும் மந்திரியும் குழந்தைகளின் மிக்க அழகிய சகல ராஜலக்ஷணங்களும் பொருந்திய முகத்தைப்பார்த்து ஆனந்தமுற்று நிற்க,

ஜோஸியர் லக்கினத்தைக் கணக்கிட்டுப் பார்த்துப் பின்வருமாறு அரசனிடம் செப்பலாயினர். மஹாராஜா! மூத்தகுழந்தையின் ஜாதகம் 20-வயதுக்குமேல் பரிபூரணமாக சங்கரனது கிருபை ஜாதகனுக்கு உண்டாகுமென்றும், 20 வது வயது வரையில் ஒருவருக்கும் அடங்காத அடங்காப்பிடாரியா யிருப்பானென்றும் தெரிவிக்கிறது. குழந்தையினிடம் பொருந்தி யிருக்கும் ராஜ லக்ஷணங்களைப்பார்க்கின் ஒருபெரிய ராஜ்ஜியலக்ஷ்மியை அடைவன் என்பதற்கு சந்தேகமேயில்லை. இரண்டாவது குழந்தையின் ஜாதகமோ அவனும் ஒரு ராஜாங்கத்திற்கு அதிபதியா யிருப்பானென்பதும் தவிர மூத்தவனைப்போல் அடங்காப்பிடாரியாயிராமல் எப்பொழுதும் தாய் தந்தையர்களுக் கடங்கிநின்று புத்திர பௌத்திரர்களோடு நெடுங்காலம் வாழ்வன் என்பதைத் தெரிவிக்கிறது.

அரசன்:—மந்திரி! ஜோசியரவாளுக்கு மரியாதைசெய்து அனுப்பிவிடு. நமது பிரஜைகளுக்கெல்லாம் சர்க்கரை பழம் முதலியன யதேஷ்டமாய் வழங்கப்படட்டும்.

மந்திரி:—அப்படியே மஹாராஜ்.

(எல்லாரும் போகிறார்கள்.)

(இன்னும் வரும்)

எம். என் கணேசயயர்.

## SPIRITUAL MADNESS.—AN ILLUSTRATION FROM 'MASNAVI.'

## காரணப்பைத்தியம்.—ஒருசிறுகதை.

பைத்தியம் இரண்டுவிதம். காரணப்பைத்தியம், காரியப்பைத்தியம் என இரண்டு. முதலில் சொன்ன காரணப் பைத்தியமாவது; காரணங்களுக் கெல்லாம் காரணமாயிருக்கிற ஆதிகாரணம் ஒன்றுண்டு என்றுநம்பி அதை யறிந்து இந்த முதற்காரணத்திலே மனதுபற்றுண்டுபோக எல்லாவற்றையும் காரணமயமாகப் பார்த்தால் காரணப் பைத்தியமாம். காரியப் பைத்தியமென்பது நிலையிலாப்பொருள் ஒன்றில் மனம் பற்றுண்டு போக அதனல் மனம் நிலைதடுமாறி தத்தளித்துப் போதலாம். காரியப் பொருள்களெல்லாம் மண், பெண், பொன் என்கிற மூன்றுவகுப்பினுள் அடங்கிவிடும். காரியப் பைத்தியம் பிடித்தவன் எப்படி பிதற்றுவானே அப்படியே காரணப் பைத்தியனும் சில சமயங்களில் பிதற்றுவதுண்டு. இரண்டையும் பிதற்றலென்று சொன்வதேன் என்றால் இருவரும் தன்னுள்ளத்தி லுள்ளதையே வெளியில் பார்க்கும் சக்தியுள்ளவர்களாயிருப்பதால் தான். ஆனல் காரணப் பைத்தியத்துக்கும் காரியப் பைத்தியத்துக்கும் வித்தியாச மென்னவென்றால், காரணப் பைத்தியனுக்குக் கருவி கரணங்களெல்லாம் ஒடுங்கி அடங்கிச் சொன்ன படிகேட்கும். தெய்வபக்தி யென்கிற குடி மயக்கமட்டும்அதிகமாயிருக்கும் காரியப்பைத்தியனுக்குக் கருவி கரணங்களெல்லாம் ஒடுங்குதலின்றி வெறிநாய் குலைப்பதுபோல் குலைத்துக் கொண்டிருக்கும் சிலநாள்முன் காரணப் பைத்தியம்பிடித்த ஒருவரைப்பார்த்தேன். அவர் நடத்தையிலெல்லாம் பைத்தியத்தைப்போல் நடந்துகொண்டாலும், அவர் வாய்ப் பிறப்பாகவரும் வார்த்தைகளெல்லாம் ஆத்மபோதம் நிறைந்ததாகவே யிருந்தன. இந்திரிய சேஷ்டைகள் இருந்தாலும் மனே நிலை சிறிதும் தடுமாறினதாகக் காணப்படவில்லை. உலகத்தாருக்கு ஞானி பைத்தியக்காரன், ஞானிக்கு உலகத்தார் பைத்தியக்காரர் என்பதையவர் முற்று முணர்ந்தவர்போல் காட்டினர். 'ஜல்-லா-லுடீன் ரூமி' யென்னும் மகம்மதிய தத்துவஞானி யெழுதியிருக்கும் மஸ்னவி யிலே இப்படிப்பட்ட ஒருவரைப் பற்றி ஒருகதை சொல்லியிருக்கிறது. அது இது:—

தெருவில் நின்று ஒருவன் "நான் ஒருதீர்க்கதரிசி: தீர்க்கதரிசிகளிலெல்லாம் சிறந்தவன் நான்"என்று கத்தினதைக்கண்டு ஜனங்கள் அவனைப்பிடித்து கழுத்தில்நெட்டிகொடுத்துத்தள்ளி எங்களையெல்லாம்விட நீயென்னத்தைத் தீர்க்கதரிசனமாகக் கண்டுவிட்டாய்? என்று அடித்தார்கள். அதற்கு அந்தமனிதன் சொன்னதாவது:—

நான் ஆதியிலிருந்து கண்விழித்தது விழித்தவண்ணமாக வழியெல்லாம் நன்றாகப் பார்த்துக்கொண்டே இந்த ஜன்மமெடுத்திருக்கிறேன். நீங்கள் கண்மூடிகளாய் வரும்வழி போம்வழி தெரியாமல் இங்கே வந்து இந்த ஜன்மமெடுத்துத் தயங்குகிறீர்கள். இதுதான் எனக்கும் உங்களுக்கும் வித்தியாசம் என்றான். "வரும்வழி, போம்வழி, மாயாவழி," யென்கிற மூன்று வழியையும் முற்றும் கண்டவன் எவனே அவனே தீர்க்கதரிசி. இவ்வழிகளை யறியாதவன் கண்ணிருந்தும் கபோதியே.

ஜனங்கள் அந்தக்காரணப்பைத்தியம் பிடித்த மனிதனைக் கொண்டுபோய் ராஜசமுகத்தில் விட்டு அவனைத் தண்டிக்கவேண்டுமென்று மனுச் செய்துகொண்டார்கள். அரசன் அவனைப்பார்த்ததும், அவன் பித்தனயிருப்பபதை யுத்தேசித்து இரக்கமுற்றுத் தனியாக அழைத்துப்போய், "நீயெந்தவூர் ? உள்ளத்தைச்சொல்" என்று கேட்டான்.

அந்த மனிதன் எங்களூர் "பேரூர்" "ஆனந்தப் நிறைந்த அம்பலத்தூர், அதைவிட்டுத் தும்புநிறைந்த இந்த வம்பளத்தூர் வந்தேன்" என்றுசொன்னன். அரசன் நீயென்னத்தைத் தின்னுவிட்டு இப்படிப்பித்தேறிப்பிதற்றுகிறாய்? என்று கேட்டான், அதற்கு அவன்: நான் இகப்பொருள் எதுவும் தின்னுபித்துக்கொண்டேனில்லை. பரம்பொருள் ஒன்றையே தின்னு குடித்துமதித்துப் போயிருக்கிறேன், இல்லாவிட்டால் "நான்தீர்க்கதரிசி" யென்று சொல்லிக்கொண்டு பிதற்றுவேனே? மண், பெண், பொன்இவற்றில்இச்சை

யுள்ளவர்கள் பரமார்த்தமாகச் சொல்வதைக் கேட்கிறதில்லை. அப்படிச் சொல்வதெல்லாம் அவர்களுக்கு பிதற்றலாக விருக்கிறது. பெண்ணையும் பொன்னையும் தவிர வேறெதுவும் இருக்கிறதாக அவர்களுக்குத் தெரிகிறதில்லை இகத்திலிருந்து முழுவதும் இந்தச்சீவனே சதமென்றிருந்து கடைசியில் நமன் வாய்ப்பட்டுப் போகிறார்கள். பக்தனொருவன் இகத்தில் பெருமிதமாக வாழ்ந்தால் அவர்கள் சகிக்கிறதில்லை! உண்மையைச் சொன்னால் உளறுகிறான் என்பார்கள். எனக்குக் காசு பணமில்லையானாலும், ஈசனது கருணை நிறைந்தொழுகும் அருட்தேன் தெவிட்டாதுண்டு மயக்குற்றுக்கிடக்கிறேன்'' என்றான். "இதனால்உனக்கு வந்த லாபமென்ன?" என்று அரசன் கேட்க, "எனக்குக்கிட்டாத லாபமென்ன?". வென்று அவன் பதில் கேட்டான். "கடவுள் தேனீக்குத் தேனும் மெழுகும் செய்யும் படியான அறிவைக் கொடுத்தார். மனிதனுக்கு அதிலும் மேலான அமிர்த மிறக்கும் அறிவையும் அமிர்தவசனம் பொழியும் வாக்கையும் கொடுத்திருக்கிறார். அவ்வறிவைக்கொண்டு அந்த ''தெவிட்டாத்தேனை'' க்கூட்டியுண்ணுதவன் மனிதரில் பதராவான். 'தேனீபோலத் தெவிட்டாத தேனுண்டு மயக்குற்றவன் எவனோ அவனே தீர்க்கதரிசி, கடவுளுக்கு மிகவும் வேண்டியவன்'' என்று சொன்னதைக் கேட்டு அரசன் திகைத்து மஹாத்மாக்களின் கோலத்தை யாரால் கலைக்க முடியும் என்று சும்மா இருந்து விட்டான்.

---

## SITA—A TALE OF HINDU DOMESTIC LIFE.

## சீதா அல்லது இல்லற வாழ்க்கை.

(59-வது பக்கத்தொடர்ச்சி.)

### 21-வது அதிகாரம்.

போக்கிறி கிருஷ்ணசாமி அய்யனுக்கு சொர்ணம்மாள் என்று ஒரு பெண் சிநேகிதமுண்டு. இந்த பெண்ணை கிருஷ்ணசாமிய்யன் தான் வைத்து காப்பாற்றுவது கஷ்டம் என்றுகண்டு மெள்ள காமேசுவரய்யரிடம் சிநேகம்செய்து வைக்கவேண்டிய எண்ணங்கொண்டு அப்பெண்ணை தினந்தோறும் காமேசுவரய்யர் வீட்டுக்கு அடிக்கடி போகும்படிக்கும் ராத்திரி நமக்கு துணை இல்லையென்று காமேசுவரய்யர் வீட்டிலேயே படுத்துக்கொள்ளும் படிக்கும் ஏற்பாடு செய்திருந்தார். காமேசுவரய்யர் இந்தப்பெண்ணை பார்க்கும்போதெல்லாம் இவள் முறுக்கினாலும் ஜாலத்தினாலும் மயங்கிப்போய் விட்டார். ஒருநாள் காமேசுவரய்யர் தனியாக தன் வீட்டுமாடியில் நின்றதைக் கண்டு இப்பெண் ஏதோபுடவை உலர்த்திக்கொள்ள வருபவள்போல் வந்தாள். காமேசுவரய்யருக்கு இவள்மேல் ஆசை அதிகம். ஆகையால் அவர் இவளைத்தனியாகக் கண்டவுடன் இவள் மனதை சோதிக்கும் பொருட்டு 'என்ன சொர்ணம் எங்கே வந்தாய்' என்று கேட்டார். அதற்கு அவள்'உங்களிடம் தான். அய்யோ நாவு ஊறுகிறது உங்கள் 'வீட்டுக்குத்தான் புடவை உலர்த்தலாமென்று வந்தேன்'. காமேசுவரய்யர்: நாவு தெரியாமல் ஊறுமா? மனதில் தோன்றினதுதான் வெளியில் ஊறும். கிடக்கிறது நான் வேண்டுமானால் புடவையை உலர்த்தித்தாட்டுமா?' என்றார். சொர்ணம் இதுகளுக்கெல்லாம் பயப்படுகிறவளாக இருக்கவில்லை. 'நீங்கள் புடவையை எனக்கு உடுத்தினாற்கூட சம்மதம் தான்' என்றாள். இனி காமேசுவரய்யருக்கு நிச்சயத்துக்கு என்னவேண்டும்! பிறகு இருவருக்கும் சிநேகம் ஆய்விட்டது. கிருஷ்ணசாமிய்யன் இருந்தவரையில் அவள் இருவருக்கும் பொதுசொத்தாக இருந்தாள். கிருஷ்ணசாமிய்யனுக்கு தண்டனை ஆனபிறகு சொர்ணத்தின் முழு பாத்தியதையும் காமேசுவரய்யருக்கு வந்துவிட்டது. காமேசுவரய்யர் பெண்சாதி லக்ஷ்மி அம்மாளுக்கு இது வெகுநாள் வரையில் தெரியாமல் இருந்தது. பிறகு காமேசுவரய்யர் பிரியம் கொஞ்சம் கொஞ்சமாகக்குறைய ஆரம்பிக்கவும் காமேசுவரய்யர் சொர்ணம்மாளுக்கு அடிக்கடி நெய் கொடுக்கவும் வீட்டிலிருந்து சாமான்கள் அனுப்பவும் வீட்டில் பெண்பெண்டாட்டிகள் ஏதாவது சொர்ணம்மாளுக்கு சாமான்கள் இல்லையென்றால் காமேசுவரய்யர் சண்டைக்கு வரவும் இதுகளையெல்லாம் பார்த்த லட்சுமி அம்மாள் தன்புருஷனுடைய கெட்ட நடத்தையை அறிந்துகொண்டாள். லட்சுமி அம்மாளும் அழகில் சொர்ணம்மாளுக்குக் குறைந்தவளல்ல, ஆனால் காமிகளுக்கு தன் சொந்தஸ்திரீகள் லட்சியம் இல்லையல்லவா? மான்களுக்கு பக்கத்திலிருக்கும் பச்சைகளைவிட தூரத்தில் இருக்கும் பச்சைப்புல் அதிகமாய் பிரகாசிக்கிறதல்லவா? தன் சொந்தஸ்திரீகள் எப்போது நம்மை நம்ம புருஷன் திரும்பிப்பார்க்கப் போகிறார்

என்று எதிர்பார்த்திருக்க திருட்டுத்தனமாய் குட்டிச்சுவறு ஏறி சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டு அகப்பட்டால் குடிமி அறுபட்டு விளச்கு மாற்றுப்பூசைபட்டு அடையும் அன்னிய ஸ்திரீகள் தானே வெகு அழகாயிருக்கிறார்கள். லட்சுமி அம்மாள் காமேசுவரய்யரை தன்னால் கூடியமட்டும் இது வேண்டாமென்று தடுத்துப் பார்த்தாள். சொர்ணத்தைக் கண்ட இடமெல்லாம் வைதாள். இவள் வைய்ய வைய்ய காமேசுவரய்யருக்கு சொர்ணத்தின் மேல் ஆசை அதிகம் ஆனது. லட்சுமி அம்மாள் மீது ஆசை குறைந்தது. கடைசியில் காமேசுவரய்யர் சொர்ணத்தின் பேச்சைக்கேட்டுக்கொண்டு லட்சுமி அம்மாளை அடிக்கக்கூட ஆரம்பித்துவிட்டார். லட்சுமி அம்மாளும் காமேசுவரய்யர் மோகத்தைப் போக்கடிக்க வந்தமந்தரவாதிகளிடமெல்லாம் விபூதி வாங்கி காமேசுவரய்யருக்கு தெரியாமல் அவருக்கு உபயோகப்படுத்தினாள். ஒன்றும்பலிக்கவில்லை. காமேசுவரய்யருக்கு லட்சுமிஅம்மாள் விபூதியைவிட சொர்ணத்தின் கடைக்கண்பார்வை அதிக சக்தி உடையதாயிருந்தது. இப்படிப்பட்ட சொர்ணத்திற்கு இரண்டு பெண்கள். மூத்தவள் அவளுடைய சொந்தப்பெண்ணல்ல. மூத்தாளுடைய பெண். இரண்டாவதுதான் சொந்தப்பெண். மூத்தாள் பெண்ணுக்கு நாகம்மாளென்று பெயர். அப்பெண்ணை கர்ப்பம் தரித்திருந்தபோது ஒரு பெரிய நாகஸர்ப்பம் மூத்தாள்மேலே விழுந்து அவள் கழுத்தை சுற்றிகொண்டிருந்து அவளை கடிக்காமல் விலகினபடியால் அப்பெண்ணுக்கு நாகம்மாளென்று பேர் வைக்கப்பட்டது. சொந்தப்பெண்ணுக்கு செல்வம் என்று பெயர். இந்தப்பெண்கள் இரண்டும் சொர்ணம்மாள் புருஷன் சுப்பிரமணிய்யர் பெண்களென்றே சொல்லலாம். சுப்பிரமணிய்யருக்குசெல்வம் பிறந்த பிறகு துரதிர்ஷ்டத்தினால் ஒரு வியாதி உண்டாகி அண்டவாய்வு உண்டாய்விட்டது. சொர்ணம்மாள் இதனால் அவரை லட்சியம் செய்கிறதேஇல்லை. சுப்பிரமணிய்யருக்கு தன் ஏழைத்தனத்தினால் சொர்ணம்மாளுக்கு சம்பாதித்துபோட சக்தியும் இல்லை. சுப்பிரமணியருக்கு அந்த ஊரில் மூட்டை சுப்பிரமணிய்யர் என்று பேர்வந்தது. ஏனென்றால் அவர் ஒருதரம் கோயம்பத்தூர் ஜில்லாவில் ஈரோடு தாலுக்காவுக்கு போயிருந்தார். அங்கே இவரை ஒருவருக்கும் தெரியாது. ஒரு தபால்வண்டியில் ஏறி பெட்டியில் சுப்பிரமணிய்யர் உட்கார்ந்து கொண்டார். வண்டிக்காரனுக்கு உட்கார இடமில்லை. சுப்பிரமணிய்யருக்கு வியாதி என்பது அவனுக்கு தெரியவில்லை. அவன் தனக்கு இடமில்லாமல் போனதைக்கண்டு கோபித்துகொண்டு சுப்பிரமணிய்யரைப் பார்த்து 'ஓய் நீர் பெட்டியில் உட்கார்ந்ததுமன்றி ஓமது மூட்டையை வேறேவைத்துக் கொண்டால் நான் எங்கே உட்காருகிறது? உமது மூட்டையை கீழே இறக்கும். இல்லாவிட்டால் நான் அதை இழுத்து வெளியே எறிந்துவிடுவே'னென்றான். சுப்பிரமணிய்யர் அவனிடம் தன் குறைவை சொல்லிகொள்ள வெட்கப்பட்டுகொண்டு அடே கிடக்கிறது ஏறிக்கொள்ளென்றார். அவன் மறுபடி கோபித்து என்ன ஓய் சொல்லச்சொல்ல மூட்டையை எடுக்க மாட்டேனென்கிறீர்? என்று மூட்டயை இழுக்கப் போனான். இதற்குள் தபால் வண்டியில் ஏறுவதற்கு சாத்தூர் குண்டுராமய்யர் என்று ஒருவர் வந்தார். அவருக்கு சுப்பிரமணிய்யரை தெரியும். உடனே ஒரு நொடியில் அவர் சங்கதிகளை தெரிந்துகொண்டு வண்டிக்காரனை தனியாகக் கூப்பிட்டு அவருடைய உள்ள சங்கதிகளைச் சொன்னார். வண்டிக்காரன் பிறகுஅவரைக்கண்டு இரங்கிதான்நின்று கொண்டே வண்டியை ஓட்டினான். இந்தசங்கதியை குண்டுராமய்யர் பூவரசநல்லூரில்போய் சொல்ல, இவருக்கு மூட்டை சுப்பிரமணிய்யரென்று பேர் வைத்தார்கள். சுப்பிரமணிய்யருக்கு சொர்ணம்மாள் நடத்தை தெரிந்தும் அவர் ஒன்றும் செய்ய முடியவில்லை. தனக்கோ சக்தி இல்லை. சம்பாதிக்கவும் முடியவில்லை. சொர்ணம்மாள் அடிக்கடி நீர் சம்பாதித்து போடுகிறீரா நான் சம்பாதிக்கட்டுமா? என்று கேழ்க்க அவர் எப்படியோ நமக்கு சிரமம் இல்லாமல் சொர்ணம்மாள் சம்பாதித்தால் சரிதான் என்று சொல்லி நீ எப்படியோ செய், என்னை சம்பாதிக்க சொல்லாமலிருக்கச் சொன்னால் சரிதான் என்று சொல்லிவிட்டார். கொஞ்சம் நாள் சொர்ணம்மாள் காமேசுவரய்யரை சுப்பிரமணியருக்கு தெரியாமல் வீட்டுக்கு கூட்டிவந்தாள். பிறகு சுப்பிரமணிய்யர் இருந்தபோதிலும் அவரை லட்சியம் செய்யாமல் அவர் எதிரவே காமேசுவரய்யரை கூட்டிக்கொண்டு வந்தாள். இன்னும் கொஞ்சகாலத்திற்குப் பிறகு சொர்ணம்மாள் சுப்பிரமணிய்யரையே காமேசுவரய்யரை கூட்டிவா அனுப்ப ஆரம்பித்தாள். பாவம் சுப்பிரமணிய்யர் காமேசுவரய்யரை எதற்கு என்று கூப்பிடுவார். மனதில் ரோசமாயிருந்தபோதிலும் அவர் ஒன்றும் செய்யக்கூடவில்லை. ஆகிலும் சொர்ணம்மாளை ஒன்று மட்டும் வேண்டிகொண்டார். பப்ளிக்காக தன்பெயரை கெடுத்துக்கொள்ளாமல் கொஞ்சம் இரகசியமாக காமேசுவரய்யரோடு மட்டும் இருக்கும்படி வேண்டிக்கொண்டார். காமேசுவரய்யருக்கு சொர்ணத்தின் பேரில் பிரியம் வரவர அதிகரித்தது. சொர்ணம் தன் மூத்தாள் பெண் நாகம்மாளை கொஞ்சமேனும் கவனிக்கமாட்டாள். தன் மகளுக்கு தயிர் வார்ப்பாள். மூத்தாள் பெண்ணுக்கு மோரு தான் கிடைக்கும். தன் பெண்ணுக்கு நாலு நாளைக்கு ஒருதரம் எண்ணை தேய்ப்பாள். மூத்தாள் பெண்ணுக்கு மறு தீபாவளிக்குள் நாலு தடவை தேய்த்துவிடுவாள். அவளுக்கு தலைகூட பின்னமாட்டாள். தன் மகள்வீட்டில் ஒருகாரியமும் செய்யகூடாது. மூத்தாள்மகளை சற்றேனும் உட்காரவிடமட்டாள். தன் மகளை பள்ளிக்கூடத்திற்கு அனுப்பி அவளுக்கு படிப்பு எல்லாம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தாள். மூத்தாள் பெண்ணுக்கு படிப்பே கிடையாது. இதைத்தவிர மூத்தாள்பெண் சரியாக காரியம் செய்கிறதில்லை யென்று அவள் மீது ஏதா

வது தோஷம் கற்பித்துக்கொண்டே அவளை ஒரு நாளைக்கு ஒருதரமாவது அடிக்காமல்விடமாட்டாள். சுப்பிரமணியர் ஒருபேச்சாவது அவளை மீறிப்பேசக்கூடுமா? தன் தாயும் போய் இளையாளை தாய் என்று நம்பி இருக்கும் ஒன்றும்அறியாத சிறு பெண்களை அடிக்கிற கொடுமைசெய்யும் இப்படிப்பட்ட இளைய தாயாரை விட காட்டில் புலி கரடிகள் எவ்வளவோ பிரியமுள்ளவைகளென்று நாம் சொல்ல தடை என்ன? அவைகள் உடனேசாப்பிட்டு விடுகின்றன. இவர்கள் சித்திரவதை செய்து உயிரைக் கொஞ்சம் கொஞ்சமாக போக்குகிறார்கள். காமேசுவரய்யரிடம் சொர்ணம் பழகப் பழக காமேசுவரய்யரிடம் இன்னும் தைரியமுள்ளவளாக ஆய்விட்டாள். தன் பெண்ணுக்கு கை றை பண்ணிப்போடச்சொன்னள். நல்ல தோடு வாங்கிப்போடச் சொன்னள். இப்படி அவள் சொன்ன நகைகள் ஒன்றாவது பாக்கிவிடாமல் காமேசுவரய்யரும் போட்டுவந்தார். காமேசுவரய்யர் சொர்ணத்துக்கு இப்படி நகைகள் செய்ததைப் பார்த்த தங்கம் எறிகிற வீட்டில் பிடிங்கினது லாபம் என்று எண்ணி தனக்கும் ஒருகாசிமாலை வாங்கிப் போடவேணுமென்றுகேட்டாள். தங்கம் காமேசுவரய்யருக்கு தகுந்ததுபோல் எதாவது கதை பேசிக்கொண்டே அவரை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு அவரிடம் காரியத்தை முடித்துகொண்டு விடுவாள். சிலசமயங்களில் தன் ஊரிலிருந்து காமேசுவரய்யருக்கு வெகு அபூர்வமான பதார்த்தம் வாஙகி வருவதுபோல் பட்டிக்காட்டில் அகப்படக்கூடாததும் ஆச்சரியமானதுமான ஒரு பதார்த்தத்தை வாங்கி வந்து அவருக்கு கொடுத்துவிட்டு அவரிடம்ஒன்றுக்கு பத்தாக வாங்கிக்கொண்டுபோய் விடுவாள். கபடமென்பதே தெரியாத காமேசுவரய்யர் அவள் கேட்டதை யெல்லாம் கொடுத்துவிட்டு ஏமாந்துபோவார். இப்படி தங்கம் இதுதான் சமயம் என்று கண்டு ராமச்சந்திரன் பட்டணத்தில் இருந்தாலும் சாவகாசம் ஏற்பட்ட போதெல்லாம் அவனைப்பற்றி தூஷித்துக்கொண்டிருந்து தனக்கு ஓர் காசிமாலை கல்லிழைத்த ஓலை கெடியாரசங்கிலி எல்லாம்செய்து கொண்டாள். சொர்ணம்மாள் இதை எல்லாம் பார்த்துவிட்டு நாம் இப்படி இருக்கக்கூடாது என்று காமேசுவரய்யரிடம் நான் எத்தனை நாள் வீடு இல்லாமல் இருக்கிறது! எனக்கு ஒரு வீடு கட்டித்தந்தால்தான் நான்இங்கே இருப்பேனென்றாள். காமேசுவரய்யர் உடனே இரண்டாயிரம் ரூபாய் கடன் வாங்கி ஒருபெரிய வீடு சொர்ண்ணம்மாளுக்கு கட்டிக்கொடுத்து அவளுக்கு தானமாகக்கொடுத்துவிட்டார். இப்படி இவர்கள் காமேசுவரய்யரிடம் கொள்ளை அடிக்கிறதைக்கண்ட காவாலி சுப்பய்யன் நாமும் காமேசுவரய்யரை அண்டினல் பிழைக்கலாமென்று தீர்மானித்து காமேசுவரய்யரை ஸ்தோத்திரம் செய்துகொண்டு கூடவே அலைய ஆரம்பித்தான். ஆஷாடபூதி வெங்கட்டராமசாஸ்திரிகளும் காவாலி சுப்பய்யனும் பாகம் செய்துகொள்ளும்போது அவர்களுக்கு சொத்தில் முக்கால் பங்கு கடன் இருந்தது. வெங்கட்டராமசாஸ்திரிகள் சம்ஸாரியாதலால் அந்தக்கடன் சொத்துக்கு சரியாக வந்துவிட்டது. இதினல்தான் வெங்கடராமசாஸ்திரிகள் ஊரில் யாரைக் கெடுக்கலாமென்றும் யாருக்கு பொய் சாக்ஷி சொல்வோமென்றும் அலைந்துகொண்டிருந்து ஜயிலில்போய் சேர்ந்தார். காவாலி சுப்பய்யனும் இந்தக் காரணத்தினலேயே காமேசுவரய்யர் குடும்பத்தை கீழே யிறக்கவேண்டும் என்றும் தான் லாபம் சம்பாதிக்கவேண்டுமென்றும் தீர்மானித்தான் இதற்குள் காமேசுவரய்யருக்கு கடன் அதிகமாய்விட்டது. எல்லாம் அதிகவட்டிக் கடனுனதால் நாலைந்து வருஷத்துக்குள் இரண்டு பங்காய்விட்டது. காமேசுவரய்யருக்கு சம்ஸாரமோ அதிகம் வருகிறவரும்படிக்கு மேல் இரண்டு பங்குசெலவாகும். ஆகையால் பணம் சரியாக அகப்படாமல் இரண்டுமூனு வட்டிசொன்ஞற்கூட வாங்கிவிடுவார். காவாலிசுப்பய்யன் இதைக்கண்டு தான் காமேசுவரய்யருக்கு கடன்வாங்கிக்கொடுக்க ஆரம்பித்தான். எங்கேயாவது பணம் வட்டிமீது வாங்கிவந்து அதை நாட்டுக்கோட்டை செட்டியிடம் வாங்கிவந்ததாகவும் இரண்டுரூபாய் வட்டிக்கு குறையமாட்டேனென்று சொல்லிவிட்டானென்றும் சொல்வான். காமேசுவரய்யர் அவன் தனக்காக நாட்டுக்கோட்டை செட்டியிடம்போய் வாஙகிவந்ததுபோல் நினைத்து சந்தோஷப்படுவார். இப்படி சுப்பய்யன் காமேசுவரய்யருக்கு வேண்டியபோதெல்லாம் கடன்வாங்கிக் கொடுத்ததில் சுப்பய்யனுக்குலாபம் நன்றாய்க் கிடைத்தது. காமேசுவரய்யருக்கும் இவன் மீது பிரியம் அதிகமாயிற்று. சுப்பய்யன் இந்த லாபமெல்லாம் போதாது என்று சொல்லி காமேசுவரய்யரிடம் அவர் இப்படி சொத்தை வைத்துக்கொண்டு மானேஜர் கணக்குப்பிள்ளை எல்லாம் வைத்துகொண்டிருந்தால் அவர்களெல்லாம் மோசம்செய்து விடுவார்களென்றும் சொத்தில் மிச்சம் பிடித்து கடனை அடைக்கமுடியாதென்றும் அதற்காக சொத்தில் முக்கால்பங்கை தன்னிடம் குத்தகைக்கு கொடுத்துவிடும்படிக்கும் போதித்தான். காமேசுவரய்யர் அதற்கு இணங்கவே, காமேசுவரய்யர் சொத்தில் உபயோகமில்லாத நிலங்களை யெல்லாம் தான்வைத்துக்கொண்டால் கட்டிவராது என்று மனதில் நினைத்து கபடமார்க்கமாக அவரிடம் 'முழுவதும் குத்தகைக்கு கொடுத்தால் உங்கள் கௌரவம் போய் விடு'மென்று சொல்லி அதில் உபயோகமில்லாத ஜாகாக்களை காமேசுவரய்யரிடம் விட்டுவிட்டு நல்ல ஜாகாக்களைப் பொறுக்கி அவைகளிலிருந்து ஐய்யாயிரம் ரூபாய் வரக்கூடியசொத்தை மூவாயிரம்ரூபாய்க்கு குத்தைகைக்கு வாங்கிவிட்டான். இது போதாமல் அந்த குத்தகையைக்கொண்டு காமேசுவரய்யருடைய நாட்டுகொட்டையானுடையசடனைத்தீர்ப்பதாக ஒப்புக்கொள்ளாமல் காமேசுவரய்யர் அரைவட்டிக்குசரியாய் வாங்கினஇடத்தில் கொடுப்பதாக சாட்டிக்கொண்டான். ஏனென்றால் சாட்டிகொண்டவர்கள் நல்லவர்கள் ஆனதால் அவர்கள் வட்டிக்கு வட்டியும் கேழ்க்கமாட்டார்கள். முதலையும் கொடுத்

தபோதுவாங்கிக் கொள்வார்கள். இதுகண்டுசுப்ப ய்யன் குத்தகைப் பணத்தையும் அவர்களுக்குக் கொடாமலே லாவாதேவி செய்து கொண்டிருந்து கடைசியில் தொகைகளைவேறு யார்பேரிலாவது வைத்து விட்டு இன்ஸால்வெண்டுக்கு மனுக்கொடுப்பதாய் யோஜித்திருந்தான். இதையெல்லாம் அறியாத காமேசுவரய்யர் சுப்பய்யன் தனக்கு நல்ல உபகாரியென்று அவன் மீது வெகு பிரியமாயிருந்தார். காமேசுவரய்யர் இவ்வளவு கடன் வாங்கியும் பட்டணத்துக்கு ராமசந்திரன் படிப்புக்கு சரியாகபணம் அனுப்புகிறதில்லை. அவன் எத்தனை கடிதம் போட்டபோதிலும் பதில் அனுப்புகிறதில்லை. ராமச்சந்திரன் இதுகளை யெல்லாம் கண்டு அடிக்கடி கண்டித்துகடிதம் எழுதினன். அதுதான் சமயம் என்று கண்டு தங்கமும் சுப்பய்யனும் ராமச்சந்திரன் அவன் பெண்சாதி அவன்தாயீ இவர்களைப்பற்றி காமேசுவரய்யரிடம் எதாவது தூஷித்துக்கொண்டே இருந்து கடைசியில் காமேசுவரய்யருக்கு ராமச்சந்திரன் மீது ஒருவெறுப்பு உண்டாகும்படி செய்துவிட்டார்கள்.

எஸ். இராமஸ்வாமிஐயர் பி. ஏ.

---

# HAMLET, THE TRANSCENDENTALIST.

(FROM SHAKESPEARE)

## ஹேமசந்திரஸிங் என்னும் ஆத்மவிசாரி

(ஆங்கிலத்தின் மொழிபெயர்ப்பு)

*By Sri Rajanayaki.* ஸ்ரீராஜநாயகி.

---

### ஐந்தாவது அங்கம்.

#### காக்ஷி. 2

ராணி:—எனக்கு என்னவோ செய்கிறது. மயக்கமாயிருக்கிறது, என்னைப் பிடித்துக்கொள்ளுங்கள். (சாய்ந்துவிழுகிருள்).

ஹரிராஜ:—இரண்டுபேருக்கும் நல்லகாயம். இந்தாருங்கள், இந்தத்துணியைப் போட்டுக் கட்டுங்கள்.

ஹேமசந்:—அதோ எங்களம்மாவைப் பாருங்கள் அவளுக்கு என்னவோ தெரியவில்லை.

ஆஸ்ர:—உனக்கென்ன செய்கிறதப்பா, லக்ஷ்மண்ஸிங்?

லக்ஷ்மண:—தன்வினை தன்னைச்சுடும். என் விஷமம் என்மேலேயே பாய்ந்துவிட்டது. அவரை விட எனக்குப்பெரியகாயம். பிழைக்கமாட்டேன்.

ஹேமசந்:—உனக்கென்ன உடம்பு அம்மா?

ராஜு:—உங்கள் ரத்தகாயத்தைப் பார்த்து மூர்ச்சித்துவிட்டாள். வேறொன்றுமில்லை. சற்றுப் போனால் எழுந்துவிடுவாள்.

ராணி:—இல்லை, இல்லை! நான் எழுந்திருக்கமாட்டேன். எனக்கு இனி எழுந்திருக்கவும வேண்டாம்! ஐயோ என்குழந்தாய்! அந்த ஷர்பத் பண்ணின வேலை இது, என் குழந்தையை கொல்லயத்தனித்த பாபியைவிட்டு நான் நல்லவேளையில் போய்ச் சேருகிறேன்—ஐயோ எனக்குப்பேச சக்தியில்லை. நான் இவனிடத்தில் அதிக சுகப்படவில்லை—புத்தி பிசகிப்போனேன். மன்னித்துவிடு. உன்னை மறக்கமாட்டேன். (இறந்துவிடுகிருள்.)

ஹேமசந்:—யாரையும் வெளிவிடாமல் தோபடத்துவாசலை காத்துக்கொள்ளுங்கள்.

லக்ஷ்மண:—ஹேமசந்திரா, உண்மையை நான் சொல்லி விடுகிறேன் கேட்டுக்கொள். உனக்கு இன்னும் அரைநாழிகையோ, ஒரு நாழிகையோ! உன்னைக்குத்திய கத்திவிஷம் தீட்டியகத்தி. அதையே நீ பிடுங்கிக்கொண்டாய். அதனாலேயே எனக்குங்காயம். கத்திமுனை மழுக்கியதல்ல. எனக்கு மாரடைக்கிறது. நான் சாகிறேன்! எல்லாவற்றிற்கும் உன் சிற்றப்பனே காரணம். அவர்தான் என் புத்தியைக் கலைத்ததும் என்னைத்தூண்டியதும்.

ஹேமசந்:—பின்னென்ன ஐயா! கத்தியில் கூர் இருக்கிறது. விஷம் இருக்கிறது. எனக்கின்னும் அரைநாழிகை மூச்சிருக்கிறது. இதைக்காட்டிலும் தெய்வம் மனிதனுக்கு என்ன உபகாரம் செய்யமுடியும்? இந்த உன் கடனை எடுத்துக்கொள். வெகுநாளைய பாக்கி. கழுத்துக்குக் கீழேசானே உன் சங்கிலி கவசம்! (ராஜுவைப் பிடரிக்குமேலே குத்துகிருன்.)

எல்லோரும்:—ராஜத்துரோகம்! ராஜத்துரோகம்!! கொலை!!!

ராஜ:—வீரர்களே என்னைச்சூழ்ந்து ரக்ஷியுங்கள்! அதிககாயம் படவில்லை.

ஹேமசந்:—இப்பொழுதுதான் என்மனசு நிர்மதியாயிற்று! குடியைக்கெடுக்கிற குலத்துரோகிப் படவா! இந்தா ஷர்பத்தையும்சாப்பிடு! (ராஜவின் வாயில் ஷர்பத்தை ஊற்றுகிறான்.) நீ செய்திருக்கிற வேலையைப்பார் கண்ணாலே. நான் இனி உன்னைத் தொடாமாட்டேன் மற்றவர்களெல்லாம் உன்னை ஈரேழுலகத்திலும் விடமாட்டார்கள். போ, போ, உன்கர்மத்தைத் தீர்த்துக்கொண்டு வந்து சேர்; உனக்கேனிந்த புத்தி! (ராஜ் சாகிறான்.)

லக்ஷ்மண:—நீசெய்தது நிரம்பசரி. அந்தஷர்பத் அவனேதான் தயார்செய்தான். ஹேமசந்திரா, நீதான் என்னை மன்னிக்கவேண்டும். தெய்வசங்கல்பம் இப்படியா இருந்தது! என்பிதாவின் மரணத்திற்கும் என்மாணத்திற்கும் நீ பாத்தியமல்ல, நான் உன்னை மன்னித்துவிட்டேன். உன்மாணத்திற்குத்தான் நான்காரணம். நீ என்னை மன்னிக்க வேண்டும். (சாகிறான்.)

ஹேமசந்:—நல்லதப்பா, நானும் உன்பின்வருகிறேன்; ஒருவரையொருவர் மன்னிக்காவிட்டால் இவ்வுலகத்தில் குடியிருக்கமுடியுமா? ஐயோ என் தாய்! இதற்குத் தானா மறுவிவாகம் செய்துகொண்டாய்? சுவாமி, எனக்கும் காலம் கிட்டிவிட்டது! ஜனங்களே இதைப்பார்த்துப் பிரமித்து பயப்படவேண்டாம். எனக்கு சாவகாசப்பட்டால், நான் எவ்வளவோ சொல்லவேண்டியதிருக்கிறது. ஆனால் யமன் என்னைக்கூப்பிடுகிறான், தாமதிக்கமுடியாது இனிமேல் என்னால் சொல்லமுடியாது. எல்லாம் விடு சகோதரராகிய ஹரிராஜஸிங் உங்களுக்கு சவிஸ்தாரமாய்ச்சொல்லுவார். உங்கள் சந்தேகங்கள் ஆக்ஷேபணைகளையெல்லாம் அவர்தீர்ப்பார். அப்புறம் நீங்களே இன்னும் அதிகமாக ஆச்சரியப்படுவீர்கள். சுவாமி! எனக்கு உத்தரவு கொடுங்கள். இவர்களுக்கு என் சரித்திரத்தை உள்ளபடி என் குற்றங்குறைகளை ஒன்றும் ஒளிக்காமல் சொல்லுங்கள். நான் புலஸ்தியவர்மாவை அவசரப்பட்டுத் தவறிப் போய்க்கொன்ற தோஷத்தினால் இவ்வளவுதூரம் சம்பவித்தது. இப்பொழுது அதற்குப் பிராயச்சித்தமும் பெற்றுக்கொண்டுவிட்டேன். இனி எனக்கொன்றுங்குறைவில்லை. இனி அரைக்கால் தம்படிக்கு ஒரு ஜன்மம் கிடைக்கிறதாயிருந்தாலும் எனக்கு வேண்டாம்.

ஹரிராஜ:—உங்கள் சரித்திரத்தை இவர்களுக்குச்சொல்லி ஆகவேண்டியதென்ன? உங்களுக்காகத்தான் நான்வேலையை ராஜீநாமாக்கொடுத்து விட்டுவந்தேன். இனி எனக்கிங்கென்னவேலை! நாமிருவரும் சேர்ந்தேபோவோம், நானும் வருகிறேன். இதோ இந்தக்கிண்ணத்தில் கொஞ்சம் ஷர்பத் மிச்சமிருக்கிறது. (கிண்ணத்தை எடுக்கிறான்.)

ஹேமசந்:—அந்தக்கிண்ணத்தை இப்படிக்கொடுங்கள்! (கிண்ணத்தைப்பிடுங்கிக்கொண்டு) என்ன நீங்கள்கூட இப்படி ஆரம்பித்துவிட்டீர்கள்! தங்களுக்குத்தெரியாதல்லவே நான் சொல்லுகிறதற்கு? நம்முடைய சிநேகத்துக்குப் பிரிவேது மறப்பேது? எங்கிருந்தாலென்ன? நக்ஷத்திரம் ஆகாசத்திலிருக்கிறது. கண்பூமியிலிருக்கிறது. இரண்டுக்கும் நிமிஷத்துக்கு நிமிஷம் சமாசாரம் போய்க்கொண்டிருக்கவில்லையா? எனக்காக கஷ்டப்பட்டுக்கண்ணை மூடிக்கொண்டு மூச்சைப்பிடித்துக்கொண்டு கொஞ்சகாலம் இந்த பூமியிலிருங்கள். என் சரித்திரத்தை விளக்கிச் சொல்லயாருமில்லாமல் போய்விட்டால், உலகம் என்னைப்பற்றி என்ன நினைக்கும்? வாடிப் போகிற புஷ்பங்கூடவல்லவோ நல்லசுபவாசனையை வைத்துவிட்டுப் போகிறது! நீங்களில்லா விட்டால் என்னுடைய அபக்கியாதி தவிற நான் வைத்துவிட்டுப்போகக்கூடியது என்ன இருக்கிறது?

(துப்பாகிகள் சப்தமும் பட்டாளங்கள் வருகிற முழக்கமும் கேட்கிறது.)

அதென்ன முழக்கங்கேட்கிறது?

ஆஸ்:—ஆஜ்மீர்நாட்டிலிருந்து ஜயகோலத்துடன் பிரதாபஸிங் வருகிறாராம்-பூனாவிலிருந்தும்தூதர்கள் வந்திருக்கிறார்கள்-அதுதான் ஜயபேரிகை முழங்குகிறது.

ஹேமசந்:—அவர்கள்வந்து சமாசாரம் சொல்லுகிறவரையில் நான் ஜீவித்திருக்கமாட்டேன்-எனக்குஇப்பொழுதே கைகால் ஓய்ந்துவிட்டது-எப்படியும் ஒருமகாசபைகூடுவார்கள்.

(ஹரிராஜஸிங் ஹேமசந்திரஸிங்கைத் தன்மார்பில் சார்த்திக்கொள்ளுகிறான்).

செத்தவன் வார்த்தைக்கு ஏதாவது செல்வாக்குண்டானால் பிரதாபஸிங்குக்கே மகுடாபிஷேகம் செய்விக்கவேண்டுமென்பது என் அபிப்பிராயம் என்று சபையில் தெரிவியுங்கள். யோசித்துப்பார்த்தால் அதிலுள்ள அநுகூலங்கள் அவர்களுக்கே தெரியவரும் பிரதாபஸிங்குக்கும் காட்டுராஜனுக்கும் என் வந்தனங்கள் சொல்லுங்கள். நான்போய் வருகிறேன். சுவாமி, நமஸ்காரம்.

ஊனே மறிவதென்றா தூது சங்கே
உணர்வே பிரம மென்றா தூது சங்கே
நானவனனே னென்றா தூது சங்கே
நானவதில்லை என்றா தூது சங்கே.

(கண்மூடிவிடுகிறான்). ஓம்தத்ஸத்:

ஹரிராஜ:—இந்த ராஜ்யலக்ஷ்மி என்ன அதிர்ஷ்டஹீனை பார்த்தாயா? இப்பேர்ப்பட்ட மகாத்மாக்கள் எல்லாம் அவளைவிட்டு விலகுகிறார்களே! இப்பொழுது ஸத்யலோகத்துக்கு அதிதிலாபமும் பூலோகத்துக்கு பலஹீனமும்.

(பிரதாபஸிங்கும் தூதர்களும் சைநியங்களும் வருகிறார்கள்.)

பிரதாப :—எங்கே அந்த அதிசயக்காக்ஷி? காண்பியுங்கள்.

ஹரிராஜ :—என்னதேடுகிறீர்கள்? மயிர்க்கூச்செடுக்கும்படியான காக்ஷி ஏதாவது பார்க்கவேண்டுமானால், இங்கே வாருங்கள்.

பிரதாப :—ஆஹா, யமனுடைய பாக்கியமே பாக்கியம்; இவ்வளவு பிரபுக்களுடைய தரிசனம் அவனுக்கு ஏககாலத்தில் கிடைத்தது! அந்த பாக்கியம் எனக்கில்லாமற் போய்விட்டது. அவனுடைய லோகத்தில் என்னவிசேஷமோ இத்தனைபேரையும் ஒரே நிமிஷத்தில் அழைத்துக்கொண்டு போய்விட்டான்.

தூதன் :—பார்க்க பயங்கரமாயிருக்கிறதே! நாங்கள் ஒருநாழிகை முன்வந்திருந்தால், கடோர்க்கஜசேனன், உக்கிருருத்திரப்பிரதாபன் இருவருக்கும் சொன்ன மாதிரியாக விவாகம் முடித்துவைக்கப்பட்ட விஷயத்தைத்தெரிவித்து எங்களுக்குக்கிடைக்கக்கூடிய மரியாதைகளையும் சம்மானங்களையும் பெற்றுக்கொண்டு போகலாம். இனியாரிடத்தில் சொல்லுகிறது?

ஹரிராஜ :—நீங்கள் சொல்லுகிறபடி வந்திருந்தாலும், நீங்கள் எதிர்பார்த்த இடத்தில் உங்களுக்கு சம்மானம் கிடைத்திராது. உங்களுக்கு சம்மானம் செய்யவேண்டியவர் யுவராஜாவே; நானல்ல. இந்த சரீரங்களை எல்லாம் ஒருபெரிய மண்டபத்துக்குக் கொண்டுபோய் வைத்து அங்கேயே ஜனங்கள் மகாசபைகூடுவதற்குவேண்டியஏற்பாடு செய்தால், நான் இங்கே நடந்திருக்கும் தவறுகளையும், மனுஷியனுக்கு மனுஷியன் செய்து கொண்டிருக்கும் துரோகங்களையும் தீச்செயல்களையும் அதற்கு தண்டனையாக விளைந்த வினைப்பயன்களையும் தெளிவாய் சவிஸ்தாரமாய்ச் சொல்லுகிறேன். நான் இந்தக்கதையை ஆதியோடந்தமாயிருந்து கவனித்துப்பார்த்தவன். கதை முழுதும் நடந்தது நடந்தபடி ஜனங்களுக்குத் தெரிவிக்கும்படி இதோ படுத்திருக்கிற யுவராஜா அவர்களுடைய கடைசிக்கோரிக்கை. ஆதலால் நண்பர்களே, பிரபுக்களே, நீங்களெல்லாரும் அரண்மனைமத்திய மண்டபத்திற்கு வந்தீர்களானால், பரிதாபகரமான கதை யொன்று சொல்லுகிறேன். இஷ்டப்பட்டவர்கள் கேளுங்கள்.

பிரதாபஸிங் :—நாமெல்லோரும் அங்கேயே போவோம். ஜனங்களை இப்படி பிரமித்து பயந்து போய் சந்தேகிக்கும்படி விட்டுவிட்டால் இன்னும் அதிக கேடுவிளையும். அதற்கிடங்கொடாமல் அவர்கள் பயத்தை நிவர்த்திசெய்து சாந்தப்படுத்த வேற்பாடுசெய்வோம். நானும் இந்தராஜ்ய சம்பந்தமாகப் பேசவேண்டிய விஷயங்கள் இருக்கின்றன.

ஹரிராஜ.—அதுவிஷயமாகவும் யுவராஜாவினுடைய அபிப்பிராயம் நான் வெளிவிடவேண்டியதிருக்கிறது.

பிரதாப :—நல்லது அவருடைய சரீரத்தை வீரசுவர்க்க மடைந்தவர்களுக்குச் செய்யவேண்டிய மரியாதையுடன் மண்டபத்துக்குக் கொண்டுபோய் அங்கே எல்லோர் பார்வைக்குங் காட்டிவிட்டு அடக்கம்செய்யவேண்டிய ஏற்பாடுகள் செய்வோம். அவர் ஒரு மஹாபுருஷன் என்பதற்கும் ஜீவித்திருந்தால் இந்த ராஜ்யலக்ஷ்மியின் நெற்றியில் திலகம்போல் விளங்கியிருப்பார் என்பதற்கும் சந்தேகமில்லை.

(எல்லோரும்போய் விடுகிறார்கள்.)

முற்றிற்று.

---

## சென்னை ஹிந்து மாதர்சங்கம்.

இச்சங்கத்தார் பிப்ரவரி மீ 8உ கூடிய மீட்டிங்கில்

### மாதுஸ்ரீ கொல்லங்கோடு

### இராணி அம்மாள் அவர்களுக்குப்

பின் வரும்வந்தனோபசாரப் பத்திரம் வாசித்து அளித்தார்கள்.

தாங்கள் தயவுசெய்து எங்களுடைய சபைக்கு வந்தது பற்றி நாங்களெல்லாரும் மிகுந்த மகிழ்ச்சியும், நன்றியறிவும் பாராட்டுகிறோம். பெண்கல்வி விஷயத்திலே தாங்கள் மிகவும் சிரத்தை எடுத்துக்கொண்டு, அநேக பாடசாலைகள் ஸ்தாபித்து, நமது தேசத்துக்கும் பலவிதமான உபகாரங்கள் செய்திருக்கிறீர்கள். எல்லாவிதமான தானங்களிலும் வித்யாதானமே மிகவும் உயர்வானதென்று நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அதிலும் நம்முடையதேசம் இப்போதிருக்கும் நிலைமையில் பெண் கல்வி மிகவும் இன்றியமையாததாய் இருக்கிறது. நமது தேசம் படும்கஷ்டத்திலே பெரும்பாகத்திற்கு பெண் கல்வியில்லாமையே முக்கிய காரணமாகும். இதைத்தாங்கள் அறிந்து பெண்கல்வி விருத்தியிலே முயற்சிபுரிந்துவருவது உத்தமமான தேசோபகாரச் செய்கையென்பதில்ஆக்ஷேபமில்லை.

இன்னும் நமது தேசத்திலே முற்காலத்தில் பெரியமனிதர் வீட்டு ஸ்திரீகள்கூட நூல் நூற்றல் முதலிய தொழில்கள் செய்துவந்தார்களென்றும் அத்துடன் நூல் ராட்டனத்தின ஒலிக்கு ஒத்து ஸோஹம் என்ற மகாமந்திரத்தை ஜெபித்துக்கொண்டு சத்காலம் கழித்து வந்தார்களென்றும் சுவாமி விவே

காரநந்தர் முதலான பெரியோர்களால் கேட்டிருக்கிறோம்.

இப்பொழுது நமக்குள் படிப்புள்ள ஸ்திரீகள் வெறும்கதைகள் படிப்பதிலேயே காலம் கழிக்கிறார்களேயொழிய, நமது ஏழைத்தேசம் சீர்ப்படுமாறு வீட்டுக் கைத்தொழில்கள் சில பயின்றுகொள்ளாமலிருக்கிறார்கள். இந்தத்தேசத்திலே இப்போதிருக்கும் தரித்திர தசையை உத்தேசிக்குமிடத்து, நமது புருஷர்களுக்கு உதவியாக ஸ்திரீகளும் ஏதேனும் சாவகாச வேளைகளிலே கைத்தொழில்கள் செய்து குடும்ப வருப்படியை அதிகப்படுத்தினால் கொஞ்சத்திற்கு கொஞ்சமேனும் செம்மையாயிருக்கும். ஸாவகாசவேளைகளை இப்போது தூக்கத்திலேயும், வீண்வம்பிலேயும் செலவிடும் பெண்கள், குடும்பத்திற்கு உபகாரமான முயற்சியிலே செலவிடுவார்களானால் எவ்வளவோ பிரயோஜனம் உண்டல்லவா.

இதெல்லாம் தங்களுக்குத் தெரியாத விஷயமல்ல. தாங்கள் பெண்கல்வியின் பொருட்டு செய்துவரும் பிரயத்தனங்களிலே, கைத்தொழிற் கல்வியும் சேர்த்து நடத்தி கீர்த்தியையும் மஹாபுண்யத்தையும் பெறவேண்டுமென்பதே எங்களுடைய பிரார்த்தனை. தாங்கள் எங்கள்மீது அன்புகொண்டு இங்கு வந்ததுபற்றி, மறுபடியும் எங்கள் சந்தோஷ உணர்ச்சியைத் தெரிவிக்கிறோம்.

தங்களுக்கு ஜகதீசுவரன் எல்லா ஐசுவரியங்களும் கொடுத்திருப்பதுபோலவே தீர்க்காயுசுகளும் கொடுத்து ரக்ஷிணை புரிவாராக.

இவ்வந்தனப் பத்திரம் அளிக்கப்பெற்றபின், மாதுஸ்ரீ இளைய ராணி அம்மாள் அவர்கள் தன் தாயார் வலியராணியம்மாள் அவர்களுக்காக சபையாருக்கு வந்தனம் புரிந்து தனக்குத் தமிழ் தெரியாதாகையால், முற்றும் கலந்துபேச முடியாமைக்கு வருத்தப்பட்டு, ஆனால், ஹிந்துமாதர் சங்கத்தார் பெண்கல்வி விஷயத்திலும் வீட்டிலேயே செய்யக்கூடிய கைத்தொழில் வேலைகளை விர்த்தி செய்யும் விஷயத்திலும் சிரத்தை யெடுத்துக் கொள்வதைப்பற்றிச் சந்தோஷப்பட்டு, இச் சங்க சம்பந்தமாக கைத்தொழில் வேலைகள் ஏற்படுத்தவேண்டுமென்கிற எண்ணம் நிறைவேறவேண்டுமென்றும், அப்படி நிறைவேற நேரிடும்பொழுது தாம் அது விஷயத்தில் கொண்டுள்ள அக்கறையைக்காட்டத் தனக்குச் சமயம் நேரிடு மென்றும் இன்னும் சில உபசாரவார்த்தைகளும் சொல்லியபின் சபை நடவடிக்கைகள் வழக்கம் போல் நடந்து முடிந்து சபைகலைந்தது.

இச்சென்னை மாதர் சங்கம் வரவர விர்த்தியாய் வருவதைக்கேட்டு மிகவும் சந்தோஷப்படுகிறோம்.

வந்தேமாதரம்

இப்படிக்கு,
சென்னை ஹிந்து மாதர் சங்கத்தார்.
"கனகபவனம்" எட்வர்ட் எலியட்ஸ்
ரோட், ராயப்பேட்டை,
8உ பிப்ரவரி 1908 ஸு

---

## A CATECHISM OF THE BHAGAVAD GITA.
## FOR THE USE OF CHILDREN.

ஸ்ரீகிருஷ்ணாயநம:

## ஸ்ரீபகவத்கீதை வினாவிடை.

(சிறுவர்க்குபயோகமாக எழுதப்பட்டது).

I.

1. 'பகவதகீதை' என்பதன் பொருள் என்ன?

'பகவானால் பாடப்பட்டது' என்பது பொருள். கீதையானது பகவான் முகத்திலிருந்து சுலோக ரூபமாகவே தோன்றியது என்னும் கொள்கைக்கு இப்பெயர் ஆதாரமாகின்றது. ஆதலால் இந்த நூல் பாடல் ரூபமாயிருப்பதே இதற்குச் சிறப்பென்றுணர்க.

2. இது எச்சமயத்தில் எதற்காகப் பாடப்பட்டது?

குருக்ஷேத்ர யுத்தகளத்தில் பாண்டவர்களும் கௌரவர்களும் பாரதயுத்தம் செய்யும் பொருட்டுத் தத்தம் சைந்யங்களோடும் படைத்தலைவர்களோடும் சென்று கூடிய காலத்தில். அருச்சுனன் கௌரவர் சைந்யத்தில் இருந்த தனது பாட்டனார், குருமார், தந்தையர், புத்திரர் மாமனார், மைத்துனர், பேரர் முதலான பந்துக்களைக்கண்டு துயரடைந்து, அவர்களோடு போர் செய்ய மனமில்லாமல் போரைக் கைவிடக்கருதினான். அப்போது அவனுக்குச் சாரதியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ கிருஷ்ணபகவான் அவனுடைய சோக

மோகங்களை நீக்கி மெய்யறிவைப் புகட்டி அவன் மேற்கொண்டிருந்த யுத்தத்தை அவனால் செய்விக்கும் பொருட்டு அவனுக்கு உபதேசமாக இதனைப் பாடியருளினர்.

3. இந்நூலைக் கற்றற் குரியவர் யாவர்?

மோக்ஷாபேக்ஷையுள்ள முமுக்ஷுக்களுக்கே முழும் இந்நூல் கற்றற் குரியதாயினும், பெரும்பாகங்கள் ஆத்மலாபத்தை அடையவிரும்புகிற எல்லாருக்கும் படித்தற்குரியதாகும். இதில் மகாபுத்திமான்களாகிய பண்டிதர்களுக்கும் மூழ்கி நிலையறியப்படாத ஆழமான பெரிய மடுக்களும், சொற்பபுத்தியுள்ள சிறுவர்களுக்கும் அஞ்சாது துளைந்து களித்தற்குரிய அழகிய ஆழமற்ற நீர் நிலைகளும் உண்டு. இது ஞானத்தை இச்சிப்பவர்களுக்கு ஞானத்தையும், பக்தியை இச்சிப்பவர்களுக்கும் பக்தியையும், கர்மத்தை இச்சிப்பவர்களுக்குக் கர்மத்தில் சிரத்தையையும் கொடுக்கும். ஆதலால் இதனைப் பண்டித பாமரர்கள் ஒவ்வொருவரும் விரும்பிக்கற்றற்குரியராவர்.

## II.

1. ஆத்மா எப்படிப்பட்டதென்று பகவான் கூறுகிறார்?

ஆத்மா, இறந்தகாலம், நிகழ்காலம் எதிர்காலம் ஆகிய முக்காலத்திலும் உள்ளது இதற்கு என்றும் அழிவில்லை, மாற்றமும் இல்லை; நித்யமானது, ஸ்வதஸ்ஸித்தமானது; பிறவாது, இறவாது, போகாது, வாராது; இது ஒன்றாலும் ஒருவராலும் கொல்லப்படாதது. கத்தி முதலிய ஆயுதங்களுக்கு லக்ஷ்யமாகாதது. இது நெருப்பால் வேகாது. நீரால் நனையாது, காற்றால் உலராது. இது கண்ணால் காணப்படாதது, மனத்தால் எண்ணவும்படாதது. இதன் ஸ்வரூபத்தை லோகஜ்ஞானிகள் அறியமாட்டார்கள். இது எங்கும் நிறைந்தது. எல்லா தேகங்களிலும் தங்குவது.

2. தேகம் எப்படிப்பட்டது? தேகமானது ஆத்மாவுக்கு அந்யமாய் அதற்கு இருப்பிடமாவது; அழிந்து போவது; வளர்ச்சி, தேய்வு முதலான மாற்றங்களுக்குட்பட்டது; இந்திரசாலம் போலத்தோன்றி ஒடுங்குவது.

3. தேகத்துக்கும் ஆத்மாவுக்கும் யாது சம்பந்தம்?

பால்யம், கௌமாரம், யௌவனம், வார்த்தக்கியம் ஆகிய அவஸ்தாபேதங்களால் எப்படி ஆத்மாவானது யாதொரு மாறுபாடும் அடைதல் இல்லையோ அப்படியே ஒரு தேகத்தைவிட்டு மற்றொரு தேகத்தை அடையும் போதும் யாதொரு மாறுபாடும் அது அடைவதில்லை. ஒருவன் எப்படித் தான் உடுத்துக் கிழிந்துபோன பழந்துணியை நீக்கிப் புதியதாகிய நல்லவஸ்திரத்தைச் சந்துஷ்டியோடு கட்டிக்கொள்ளுகிறானோ அதுபோலவே, ஆத்மாவும் வியாதி, வயோதிகம் முதலியகாரணங்களால் தளர்ந்துபோன தேகத்தைவிட்டு வேறொரு தேகத்தை அடையும். ஆகையினாலே அநித்யமாய் அழிந்து போகும் தேகத்துக்கும் அழியாமல் நித்யமாயிருக்கும் ஆத்மாவுக்கும் உள்ள கூட்டுறவு அஸ்திரமேயன்றி நிலையானதன்று.

4. உலகில் பாமர ஜனங்கள் யாது மயக்கம் அடைகிறார்கள்?

ஆத்மா இன்னது, அநாத்மா இன்னது என்னும் விவேகமில்லாத பாமர ஜனங்கள், தேகமே தாமென்றுக்ருதித்தேகம் அழியும்போது தமக்கேதோ பெருங்கெடுதிவருவதாக மயங்கி வருந்துகிறார்கள். ஆத்மஞானியோ அவ்விதமாக மயங்கி வருந்துவதில்லை. இறப்பும் பிறப்பும் தேகத்துக்கு இயற்கையானவை யென்றும் அவற்றைத்தவிர்க்க முடியாதென்றும் உணர்ந்து அவ்விஷயத்தில் அவன் வியசனத்தை அடையமாட்டான்.

5. இந்த ஆத்மஞானத்தை ஒருவன் எவ்வாறு அநுபவத்தில் பெறுவது?

பூர்வஜன்மசுகிர்தத்தாலே ஆத்ம அநாத்ம விவேகத்தைப் பெற்ற சந்நியாசிகள் ஞான நிஷ்டையினாலே ஆத்மாநுபூதியைப்பெற்று மோக்ஷத்தை அடைவார்கள். மற்றவர்கள், ஈசுவராராதனமான கர்மங்களை பலாபேக்ஷையில்லாமல் ஈசுவரப் பிரீதியாகச்செய்து அதனால், சித்தசுத்தியைப்பெற்று, அதனால் பின்பு ஞான நிஷ்டையைப்பெற்று ஞானிகளாவார்கள். பலாபேக்ஷையில்லாமல், பலம் சித்திக்கினும் சித்தியாவிடினும் ஒரே தன்மையிலிருந்து கர்மங்களைச் செய்பவர் சித்தசுத்தியை அடைந்து அதனால் ஞானநூல்களைத் தவிர மற்ற விஷயங்களில் விரக்தியையடைந்து, பின்பு மனம் ஆத்மாவில் பதிந்து நிற்கச் சமாதி ஞானத்தைப் பெறுவார்கள்.

6. ஆத்மஞானத்தைப் பெற்ற ஸ்திதப்ரஜ்ஞர்களின் இலக்ஷணமென்ன?

ஆத்மஞானி தன்னைத்தான் அறிதலாலே சந்தோஷித்து, ஒரு பொருளிலும் ஆசையில்லாதவனாய், சுகதுக்கங்களை ஒருபோலப்பாவித்து, விருப்பம், பயம் கோபம் என்பவைகளை விட்டொழிந்து, ஒன்றிலும் அபிமானமில்லாதவனாய், சுபாசுபங்களில் விருப்பு வெறுப்பில்லாமல் ஒரே நிலையாக விருப்பான். அன்றியும், ஆமையானது கைகால் தலை யென்னும் ஐந்து அவையவங்களையும் தன்னிஷ்டப்படி உள்ளே சுருக்கி அடக்குவது போல, மெய் வாய் கண் மூக்குச்செவி யென்னும் ஐம்பொறிகளையும் விஷயங்களில் செல்லாதபடி மனத்தின் வழியே நிறுத்தி, எப்போதும் பரமாத்மாவையே தியானித்துக் கொண்டிருப்பான். இந்தரியங்களையும் மனதையும் நிக்ரகித்து ஆசை யொழிந்திருத்தலினாலே அந்தஞானியின் புத்தியானது கலக்கமின்றித் தெளிந்து நிற்கும். ஜீவன்முக்தனாகிய அந்தஞானிக்கு பிரபஞ்சம் முழுவதும் இரவுபோல் அறியப்படாமலும், பரம்பொருள் மாத்திரம் பகல்போலப் பிரகாசமாகவும் இருக்கும். அவன் ஆசையினாலே எவ்வளவும் விகாரம் அடையமாட்டான். ஜலத்தால் பூர்ணமாகிய சமுத்திரத்தில் எப்படி அநேகநதிகள் அச்சமுத்திரத்தைப் பெருக்குதல் இல்லாமல் போய்ப் பாய்கின்றனவோ அவ்வாறே ஞானியைஆசைகள்சென்றடையினும் அவன் மனசுக்கு ஒரு விதமான விகாரமும் உண்டுபண்ண மாட்டா. இந்த நிலையான ஞானத்தைப் பெற்றிருப்பதே பிரம்மநிஷ்டை யென்னப்படும். இந்த பிரமநிஷ்டையில் ஒருவன் அந்த்ய காலத்தில் இருப்பினும்கூட முத்தியை அடைவான்.

எஸ். முத்துஐயர். பி. ஏ.

---

## ஆனந்தமடம்.

இப்பெயர்கொண்ட அற்புதக்கதையின் உட்கருத்தைச்சென்ற சஞ்சிகையில் எடுத்து எழுதினோம். இப்பொழுது அந்தப்புஸ்தகம் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது அதை மொழிபெயர்த்திருப்பவர் ஸ்ரீ மஹேசகுமாரசர்மா. அவருக்கு வங்காளபாஷை தெரியுமாகையால், மொழிபெயர்ப்பைக்கொண்டு மொழிபெயர்க்காமல் முதல்நூலையே மொழிபெயர்த்துள்ளார். அவர் மொழிபெயர்ப்பு முதல்நூலுக்குச்சரியாகவிருக்குமென்பதிற் சந்தேகமில்லை. அப்புஸ்தகத்திற்கு ஸ்ரீ. ஜி சுப்பிரமணியஐயர் அவர்கள் பாயிரம் எழுதியிருக்கின்றார். அதையும், ஸ்ரீ மஹேசகுமாரசர்மா எழுதியுள்ள முகவுரையில் ஒரு பாகத்தையும் கீழே பிரசுரிக்கின்றோம்:—

### பாயிரம்.

“வந்தே மாதரம்” என்று இப்போது நம் தேசத்தில் எல்லாப் பாகங்களிலும் எல்லா வகுப்பாராலும் தேசாபிமான ஒலிச்சொற்களாகச் சொல்லப் படுகின்றவைகள் ஆதியில் சுமார் 20 வருஷத்துக்கு முன்னால் பங்கிம் சந்திர சட்டர்ஜியென்கிற வங்காளி ஆசிரியர் எழுதின ‘ஆநந்தமடம்’ என்கிற கதைப் புஸ்தகத்தில் நபஜனமதேசமாகிய ஆரியமாதாவுக்கு ஸ்துத்தியமாகத் தோன்றும் ஒரு பாடலில் காணப்படுகின்றன. பங்கிம் சநதிரசட்யாசிரியர்களில் பெயர்போனவராயிருந்தாடர்ஜி வங்காளிலும் அவரைப்பற்றி மற்றமாகாணத்தவர்கள் அறியாமலிருந்தார்கள். பிறகு வங்காளப்பிரிவினை செய்யப்பட்டபோது, தேசாபிமானக் கிளர்ச்சி அதிகப்பட்டு, தேசஸேவையில் புகுந்தவர்களது ஒருமித்த உணர்ச்சியை வெளிப்படுத்தும்படியான சமிக்ஞைச்சொற்கள் வேண்டிவந்தபோது, ‘வந்தே மாதரம்’ என்ற சொற்கள் உற்றனவாக அமைந்தன. வங்காளிகள் இவ்வார்த்தைகளை ‘ராமா’ ‘கிருஷ்ணா’ என்ற பகவந்நாமங்களை உபயோகிப்பதுபோல் உபயோகப்படுத்துவதுமன்றி, எந்தப்பாடலில் இந்தவார்த்தைகள் தோன்றினவோ, அதைவெகு இனிமையான சங்கீதமாகப் பாடிவருகிறார்கள். வங்காளிகள் ‘வந்தேமாதரம்’ மந்திரத்தை அநுஷ்டிப்பதைப் பார்த்து மற்ற எல்லா இந்தியரும் அநுஷ்டிக்கத்தலைப்பட்டுத் தமிழரும் தங்கள் பேச்சுகளிலும் எழுத்துகளிலும் தேசாபிமான சமிக்ஞையாக உபயோகப்படுத்துகிறார்கள். இந்தச்சொற்களை ஆதியில் இந்திய மாதாவுக்கு ஸ்துத்தியமாக உபயோகப்படுத்தினவர் யார் என்று அறிய ஜனங்களுக்குள் விருப்பம்பிறந்திருக்கிறது. ஆநந்தமடம் என்கிற கதையானது ஆங்கிலத்திலும் இதரபாஷைகள் பலவற்றிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. தெலுங்கில் சிலகாலத்துக்கு முன்னாலேயே எழுதப்பட்டிருக்கிறது. இப்போது இதை ஸ்ரீயுத மஹேச குமார சர்மா தமிழில் பெயர்

த்தெழுத முன்வந்தது நல்லதருண முயற்சியென்றே சொல்லவேண்டும்.

ஆநந்தமடம் என்கிற கதையானது வங்காளத்தின் கீழ்ப்பாகத்தில் 1773-ம் வருஷவாக்கில் சில சந்நியாஸிக் கூட்டங்கள் அங்கங்கே கிராமாந்தரங்களிற் புகுந்து கொள்ளையடித்தும் சர்க்கார்ப் பணத்தை வழிப்பறி செய்தும் செய்த கலகத்தை யாதாரமாக வைத்துக் கொண்டு எழுதப்பட்டிருக்கும் கதை. இக்கலகத்தைப்பற்றி அக்காலத்து ஆங்கில ரிப்போர்ட்டுகளைப் பார்த்தால், இந்த சந்நியாசிகள் எவ்வித தேசாபிமானக் கிளர்ச்சியும் கொண்டு கலகஞ் செய்ததாகத் தெரியவில்லை. அக்காலத்தில் வங்காளத்தில் பலமான பஞ்சம் தோன்றி ஜனங்களுக்குக் கிரமமான ஜீவனோபாயங்கள் இல்லாமற்போய், திக்கற்ற ஏழைகள் இப்படிக்கொள்ளை யடித்ததாகத் தெரிகிறது. ஆனாலும் அக்காலத்தில் ஆங்கிலேயரின் ராஜாங்கம் ஸ்திரமாக ஸ்தாபிக்கப்படாமல் மகம்மதியரே வங்காளத்தில் ஆட்சிபுரிந்து வந்தார்கள். மகம்மதியரின் கொடுங்கோன்மையினாலேயே தேசத்திற் பஞ்சமுண்டாயிற்று. ஆகையால் மகம்மதிய ராஜாங்கத்தில் ஹிந்து ஜனங்களுக்கு இயல்பாகவே வெறுப்புண்டாயிற்று. இந்த வெறுப்பு பங்கிம் சந்திர சட்டர்ஜியின் கதைப் புஸ்தகத்தின் பிரதான கதாநாயகர் வார்த்தைகளில் வெளிப்படுகிறது. மகம்மதியர் பேரில் வெறுப்பிருந்தாலும் ஆங்கிலேயர்பேரில் வெறுப்பில்லை யென்பதும் காட்டப்படுகிறது. மகம்மதிய ராஜாங்கத்தில் வெறுப்பு காட்டுவதோடு, ஆரியதேசம் ஜன்மதேசமாகி அது பராசக்தியின் உருவமென்ற உத்தமமான உணர்ச்சியும் வெகு சிரத்தையுடன் விளக்கப்படுகின்றது. ஆநந்தமடம் எழுதினதில் பங்கிம் சந்திர சட்டர்ஜியின் முக்கிய நோக்கம் வங்காளிகளின் மனதில் தேசாபிமானம் உண்டாக்குவதேயன்றி மகம்மதியரின்பேரில் துவேஷத்தை யுண்டாக்குவதாகத் தோற்றவில்லை.

தற்காலத்தில் நம்மவருள் என்றுமில்லாத தேசாபிமான உணர்ச்சியானது புதிதாக உண்டாகிக்கொண்டுவருகிறபோது இப்படிப்பட்ட கதைப் புஸ்தகங்கள் மகா அவசியமென்பது நாம் சொல்லாமலே விளங்கும். இந்த உணர்ச்சியை வளர்த்து உயர்ந்தோர் தாழ்ந்தோர் ஸ்திரீகள் புருஷர்கள் எல்லோர் மனதிலும் ஊன்றச்செய்து, நம் அன்னையின் பெருமை ஓங்கி சொலித்தலை நிறைவேறச் செய்வதே சொல்லல்லோர் நூல்வல்லோர் அனைவரும் கொள்ளவேண்டிய கருத்தாக வேண்டும். சமீபத்தில் தமிழ்ப்பாஷையில் அநேக கதைப் புஸ்தகங்கள் வெளிவந்திருப்பினும், ஆநந்தமடத்திற் காட்டியிருப்பது போல்படிப்போர் மனதில் தேசாபிமானமானதும் நமது பூர்விக ஆரியதருமக்கொள்கைகளுக்குற்றதாக வேறெந் நூலிலும் உயர்த்திக் காட்டப்படவில்லை.

இந்திய ஜனங்களுக்கு தேசாபிமானமென்பதே தற்காலத்திலுண்டான புது உணர்ச்சி. ஆதிகாலத்து நூலாசிரியர்கள் அருமையான கருத்துகளையும் அறிவையும் ஊட்டின போதிலும் ஆரியதேசம் தனித்தேசம், அதில் விசிப்பவர் ஒரு ஜனத்தார் அவர்கள் தங்கள் ஜன்மபூமியை அன்னைபோலக் கருதி அவள் பெருமைக்கும் செல்வத்துக்கும் உழைக்கக்கடவர், என்றபெரும் பாடத்தைப் படிப்பித்தவர்களல்லர். மேல் நாடுகளிலும் "பேட்ரியடிஸம்" அல்லது தேசாபிமானமென்பது சில நூற்றாண்டுகளாகத் தோன்றினதேயன்றி ஆதிகாலமுதல் உண்டாயிருந்ததன்று. ஆங்கிலமகாகவியான ஷேக்ஸ்பியர் செய்த அநேக நூல்களில் எவ்விடத்திலும் "பேட்ரியடிஸம்" என்கிற சொல் வரவேயில்லை யென்று சொல்லப்படுகிறது. ஆயினும் பிற்காலத்தில் மேல் நாடுகள் ஒவ்வொன்றிலும் இது ஜனித்து அவைகள் ஒருமைப்பாடுற்றுப் பெருமையடைய முக்கியகாரணமானதுபோல், இந்தியாவாகிய இந்த பாரத நாட்டிலும் இந்த உணர்ச்சியானது அதன் ஒருமைப்பாட்டுக்கும் செழிப்புக்கும் முக்கிய காரணமாகுமென்பதில் சந்தேகமில்லை. பங்கிம் சந்திர சட்டர்ஜி வங்காளதேசத்தில் அபிமானத்தைக் கிளப்பக்கருதினரேயன்றி இக்காலத்தில் நாஷனல் காங்க்ரெஸ் மகாசபையாலும் மற்ற கான்பரன்சுகளாலும் உண்டாயிருக்கும் இந்தியாமுழுமையும பரவி இந்தியர் மனதையெல்லாம் கவர்ந்துவரும் விசாலித்த தேசாபிமானத்தைக் கற்பித்தவரல்லர். ஆயினும் வங்காளத்தில் வங்காளிகள் அபிமானமும் பக்தியும் வைக்க எவை காரணங்களோ, அவைகளே இந்தியாவிலும்

இந்தியர்கள் அபிமானமும் பக்தியும் வைக்கக் காரணங்களாம். ஆநந்தமடத்தை வாசிக்கும் தமிழருக்குத் தமிழுலகத்தை மட்டுந் தழுவிய அபிமான முண்டாகாமல், ஆரிய தருமத்தையும் அதை ஸ்தாபித்த பெரியோர்களின் புனிதப்பெயர்களையும் அலங்காரமாகக் கொண்ட ஆரியாவர்த்தமுழுவதும் வியாபித்த அபிமானமே உண்டாகவேண்டும்.

ஸ்ரீயுத மஹேசகுமாரசர்மாவுக்குத் தமிழில் ஞானமிருப்பதோடு, ஸம்ஸ்கிருதத்திலும் தெலுங்கு வங்காளி இவைகளிலும் ஞானமுண்டாகையால், அவரது மொழிபெயர்ப்பானது மிகவும் பொருந்தியதாகவும் இன்பமாகவுமிருக்கின்றது. கூடியவரையில் வங்காளி பாஷையிலுள்ள முதனூலின் சிறப்பையும் சொல்வன்மையையும் தாமெழுதியதில் விடாமல் அமைத்திருக்கிறார். வங்காளி பாஷையில் இன்னும் எத்தனையோ கதைப் புஸ்தகங்கள் எழுதப்பட்டு மற்ற இந்திய பாஷைகளிலும் ஆங்கிலத்திலும் பெயர்த்தெழுதப்பட்டிருக்கின்றன. ஹிந்திமுதலான பாஷைகளிலும் இப்படிப்பட்ட புஸ்தகங்கள் பல இருக்கின்றன. இவைகளைக் கூடியவரையில் தமிழில் பெயர்த்தெழுதுவது தமிழர்க்கு அறிவையும் தேசாபிமானத்தையும் ஊட்டுவதாகும்.

ஜி. சுப்பிரமணிய ஐயர்.

## முகவுரை.

'ஆநந்தமடம்' என்ற பெயர்கொண்ட இந்நூலானது வங்காளதேசத்திற் சிறந்த நவீநகதாசிரியர் என்று பெயர் பெற்ற ஸ்ரீ பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர் வங்காள பாஷையில் இயற்றிய இதே பெயருள்ள முதனூலின் மொழிபெயர்ப்பாகும். இந்த பங்கிம் சந்திர சட்டோபாத்யாய வங்காள நாட்டிலே 1838-ம் வருஷம் ஜூன் மீ 27உ யில் உயர்ந்த வேதியர் வம்சத்திற் பிறந்து மேதினிபுரம் ஹைஸ்கூலிலும் ஹூக்ளி காலேஜிலும் பிறகு பிரெஸிடென்ஸி காலேஜிலும் படித்து, அப்பொழுது புதியதாய் ஏற்படுத்தப்பெற்ற யூனிவர்ஸிடி பி. ஏ. பரீக்ஷையில் முதன்மையாய்த் தேறினர். இவரது புத்தி கூர்மையையும் புலமையையுங் கவர்ன்மெண்டார் கண்டு வியந்து இவருக்கு எடுக்கும் பொழுதே டெப்டி மாஜிஸ்ட்ரேட் உத்தியோகம் கொடுத்தனர். இவர் இந்த உத்தியோகத்தைப் பெருங் கீர்த்தியுடனும் கண்ணியத்துடனும் பல ஜில்லாக்களிலும் செய்து, சில காலம் வங்காள கவர்மெண்டுக்கு செக்ரிடெரி என்கிற உயர்ந்த உத்தியோகத்தையும் செலுத்தி, ஒருவருக்கும் அஞ்சாத சுதந்திர சீலமுடையவராதலால் அந்த உத்தியோகத்தில் வெகு காலம் இருக்க சரிப்படாமல், மறுபடியும் பழைய உத்தியோகத்துக்கே திரும்பி வந்து 1885-ம் வருஷத்தில் முதல் கிரேட் மாஜிஸ்ட்ரேட் வேலைக்கும் உயர்த்தப்பட்டார். பிறகு 1891-ம் வருஷத்தில் பென்ஷன் பெற்றுக்கொண்டு வேலையிலிருந்து நீங்கினர்.

இவர் ஸம்ஸ்கிருதத்திலும் வங்காளமொழியிலும் பிரவீணராயிருந்ததன்றி ஆங்கிலத்திலும் பெரும்புலவராயிருந்தமையால், முதலில் ஆங்கிலத்திலேயே நூலியற்றத்தொடங்கி அப்பொழுது கிஷோரிசந்த் மித்திரரால் பதிப்பிக்கப்பட்டு வந்த 'இந்தியன் பீல்ட்' (Indian Field) என்கிற பத்திரிகையிலே 'ராஜமோஹநன் மனைவி' என்ற ஓர் நாவல் எழுதத் துவக்கினர். ஆயினும், ஒருவன் எவ்வளவுதான் அந்ய பாஷையில் புலமை பெற்றிருந்தாலும், அதிலேயே பிறந்தவர்களைப்போல் அந்த பாஷையைக் கையாடி நூலியற்றி அதில் நிரந்தரமான புகழைப் பெறுவது அரிதென்று இவர் சீக்கிரத்தில் கண்டுகொண்டு, அது முதல் தம் சுயபாஷையாகிய வங்காளபாஷையை விர்த்திசெய்யத் தொடங்கினர். முதலில் 'துர்க்கேச நந்தினி' என்ற நாவலை இயற்றி வெளியிட்டார். கதை சொல்லும் தன்மையிலும் நடையெழுதுவதிலும் பழைய மாதிரியைத் தழுவாமல் புதியதோர் முறையை வெகு சாமர்த்தியமாகத் தழுவி இக்கதை யெழுதப்பட்டிருந்ததைப் பார்த்தவர்களெல்லோரும் வங்காள இலக்கிய விசும்பில் ஒரு விசேஷ ஒளிபொருந்திய தாரகை தோன்றி, அதற்கு முன்னிருந்த உடுகணங்களின் ஒளியையெல்லாம் மங்கச்செய்து திவ்யதேஜஸ்ஸுடன் ஜொலிக்கத் தொடங்கியிருந்ததென்றறிந்தார்கள். பிறகு கபாலகுண்டலா, மிருணாளினீ, என்ற நவீநங்கள் தோன்றி அவரது புகழை இன்னும் அதிகமாய்ப் பரவச்செய்தன.